Regd. No. TN/MS C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 6 பக்கம் விலை 50 காசு



செல்வங்கள்

இலட்சியவாதிகள் ஒரு நாட்டிற்குக் கிடைக்கக்கூடிய ஒப்பற்ற செல்வங்கள்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

திருப்தி

சாந்தியும், நிறைவும் ஏற்பட வேண்டுமானால், பொதுவுடைமைத் தத்துவ ஆட்சி ஏற்படவேண்டும்.

தந்தை பெரியார்



மலர்: 8 சென்னை 22-11-1983 செவ்வாய் வெளியீடு 23-11-1983 புதன் இதழ்: 37

## கருணாநிதி ஆட்சிக் காலத்தில் நடந்த மாபெரும் மோசடி:

- பலகோடி மதிப்புள்ள 46 பஞ்சலோக சிலைகள் வழக்கில் மர்மம்?
- வழக்கின் பின்னணியில் உள்ளவர்கள் யார்?
- குற்றவாளிக்கு ரூ. 100 மட்டும் அபராதம் விதித்த விந்தை!
- போலி சிலைகள் வைக்கப்பட்டுள்ளதா?

## சட்டமன்ற மேலவையில்

# திடுக்கிடும் தகவல்-பரபரப்பு

## வழக்கை மீண்டும் தொடர அரசு ஆலோசனை: அமைச்சர் ஆர். எம். வீ. அறிவிப்பு

சென்னை, நவ 22 1972-ம் ஆண்டு (கருணாநிதி ஆட்சி காலத்தில்) பல கோடி ரூபாய் மதிப்புள்ள 46 பஞ்சலோக சிலைகள் திருட்டுப் போனதாகவும் கண்டுபிடிக்கப்பட்டு மறுநாளே குற்றவாளிக்கு ரூ 100 மட்டும் தண்டனை வழங்கப்பட்ட விந்தை நடந்துள்ளது.

அந்த வழக்கின் பின்னணியில் இருப்பவர்கள் யார்? இப்போது இருக்கும் சிலை உண்மையா? போலியா என்பது பற்றியெல்லாம் அரசு மீண்டும் விசாரணை நடத்த ஆலோசித்து வருகிறது என்று மேலவையில் அறிவிக்கப்பட்டது. இந்த 46 பஞ்சலோக சிலை திருட்டு பற்றி திடுக்கிடும் தகவல்கள் மேலவையில் வெளியிட்டபோது உறுப்பினர்கள் அதிர்ச்சி அடைந்தனர்.

இன்று சட்ட மேலவையில் கழக உறுப்பினர் வலம்புரிஜான் குறுகியகால வினா ஒன்றை எழுப்பினார்.

1972-ம் ஆண்டில் திண்டுக்கல் வடக்கு காவல் சரகத்தில் விலை மதிப்பற்ற 46 பஞ்சலோக சிலைகள் திருட்டுப் போனது பற்றி வழக்கு பதிவு செய்யப் பட்டதா?

1972-ம் ஆண்டில் இந்த பஞ்சலோக சிலைகள் களவு போயிருப்பதாக காவல் துறையினர் குற்றவாளிகளைக் கண்டுபிடித்து இருக்கிறார்கள்.

ஆனால் அவசர அவசரமாக சம்பந்தப்பட்ட குற்றவாளி ஒருவருக்கு ரூ 100 அபராதம் மட்டும் போட்டு விடப்பட்டு இருக்கிறார்.

திருடு பற்றி மீண்டும் பரிசீலனை செய்து வழக்குத் தொடர முன் வருமா என்று வலம்புரி ஜான் கேட்டார்.

### பஞ்சலோக சிலைகள்

இந்த 46 பஞ்சலோக சிலைகள் எந்த எந்த இடங்களில் இருந்து திருடப்பட்டவை என்ற விவரமும் கொடுக்கப்படவில்லை.

இந்தப் பஞ்சலோகசிலை திருட்டுக் குற்றம் இழைத்தவருக்கு இ. பி. கோ 380 வது பிரிவின்படி 7 ஆண்டுகள் தண்டனை விதிக்கலாம்.

ஆனால் நகர போலீஸ் சட்டத்தின் கீழ் வழக்கு தொடரப்பட்டு தண்டனையாக ரூ. 100 அபராதம் மட்டும் தரப்பட்டு இருக்கிறது.

இது சம்பந்தப்பட்ட குற்றவாளி வழக்கமாக சிலைகள் திருடும் குற்றவாளி என்று அறிகிறேன்.

இந்த குற்ற வழக்கு நடந்து 10 ஆண்டு காலம் ஆகிறது. இருந்தாலும் காலவரம்பு கடந்து விட்டது என்று கருதாமல் அரசு இந்தமாபெரும்

### அமைச்சர் பதில்

இதற்குப்பதில் அளித்து அமைச்சர் ஆர். எம். வீ கூறியதாவது:-

இந்தத் திருட்டு கண்டுபிடிக்கப்பட்டது 9-5-72 அன்று.

அடுத்தநாள் 10-5-72 அன்று திண்டுக்கல் சப் மாஜிஸ்திரேட் கோர்ட்டில் குற்றவாளி ஏ. வி. பால்பாண்டிய நாடார் என்பவருக்கு ரூ. 100 அபராதம் விதிக்கப்பட்டுஇருக்கிறது.

46 பஞ்சலோக சிலைகள் எங்கே இருந்து திருடப்பட்டன? அதன் விவரமும் கொடுக்கப்படவில்லை.

சென்னைநகர போலீஸ் சட்டம் 67-ன் கீழ் ஒரேநாளில் விசாரணை நடத்தி அபராதம் விதிக்கப்பட்டு இருக்கிறது.

இ. பி. கோ 380 வது பிரிவின் கீழ் இந்தக்குற்றத்திற்கு 7 ஆண்டுதண்டனை விதிக்கப்படலாம் என்று குறிப்பிடப்பட்டு இருக்கிறது.

கண்டுபிடிக்கப்பட்ட சிலைகள் மதுரை மீனாட்சி அம்மன் கோவில் நிர்வாகத்திடம் ஒப்படைக்கப்பட்டு அங்கே ஒரு அறையில் வைக்கப் பட்டு இருப்பதாக தகவல் கிடைத்து இருக்கிறது.

உறுப்பினர் வலம்புரி ஜான் கேள்வி எழுப்பிய பின்னரே இது பற்றிய விவரங்களை பரிசீலித்த போது ஒரு மாபெரும் அதிர்ச்சி

(2-ம் பக்கம் பார்க்க)

போலீசார் தீவிரம்:

### சென்னை நகரில் முகமூடி கொள்ளையர் 5 பேர் கைது

சென்னை, நவ. 22 சென்னை நகரில் சந்தேகத்திற்குரிய முறையில் இருந்த 5 பேர் கைது செய்யப்பட்டனர் இவர்கள் முகமூடி கொள்ளை கோஷ்டியைச் சேர்ந்தவர்களா என போலீசார் விசாரித்து வருகிறார்கள்.

இதுபற்றி போலீஸ் தரப்பில் கூறப்படுவதாவது:-

சென்னை புறநகர் பகுதிகளில் நடைபெற்ற முகமூடி கொள்ளைகளில் சம்பந்தப்பட்டவர்களில் சிலர் கைதாகியிருப்பதும் மேலும் சிலரை போலீசார் தேடி வருவதும் தெரிந்ததே.

சென்னை சென்ட்ரல் ரெயில் நிலையபோலீசார் கடந்த 12-ந் தேதி முதல் 21-ந் தேதி வரை சென்ட்ரல் ரெயில் நிலைய பகுதிகளில் சந்தேகத்திற்குரியவகையில் நடமாடிய 101 பேர்களை கைது செய்து விசாரித்தனர்.

இதில் ஒரிசாவைச் சேர்ந்த அச்சுதசிந்தாணி (வயது 36) அலகாபாத்தைச் சேர்ந்த நிஷார் (வயது 30) நேப்பாளத்தைச் சேர்ந்த ஜித்பகதூர் (வயது 50) பீஜப்பூரைச் சேர்ந்த பக்கீர் அப்பா (வயது-35) ஆகியோர் முகமூடி கொள்ளை கோஷ்டியைச் சேர்ந்தவர்களா என்பது குறித்து விசாரிக்கப்பட்டு மாவட்ட போலீசார் வசம் ஒப்படைத்துள்ளனர்.

தொடர்ந்து போலீசார் விசாரணை நடத்தி வருகிறார்கள்.

முகமூடிக் கொள்ளைக்

(2-ம் பக்கம் பார்க்க)

கழக கொள்கை பரப்புச் செயலாளர்

### புரட்சிச் செல்வி ஜெயலலிதா அவர்கள் சுற்றுப்பயணத்தின் போது அளிக்கப்பட்ட நிதி

தர்மபுரி மாவட்ட ஒன்றிய நகர கழக உடன்பிறப்புக்கள், மன்ற மறவர்கள் அளித்த கழக தேர்தல் நிதி
1 லட்சத்து 50 ஆயிரம் ரூபாய்

திருநெல்வேலி மாவட்ட ஒன்றிய, நகர கழக உடன்பிறப்புக்கள் மன்ற மறவர்கள் அளித்த கழக வளர்ச்சி நிதி
5 ஆயிரத்து 732 ரூபாய்

## ப. உ. ச. கடிதம்

### வரலாற்றில் ஓர் புதுமை

பேரன்புடையீர்.

தான் பெற்றபிள்ளையை சான்றோர்கள் புகழக் கேட்ட தாய், பிள்ளையை ஈன்றபோது அடைந்த மகிழ்ச்சியை விட பெரிதும் உவப்பாள்.

—இது வான்புகழ் வள்ளுவன் வாக்கு.

வாய்மை தவறா வள்ளுவன் வாக்கு எந்த அளவிற்கு உண்மையானதென்று ஞாயிறன்று கலை உலகம் புரட்சித்தலைவருக்கு சென்னையில் நடத்தி காட்டிய பாராட்டு விழா காட்டியது!

விண்ணில் தனித்தனியே ஜொலிக்கும் நட்சத்திரங்கள் ஒன்று கூடினால் அக்காட்சி எவ்வளவு அழகாக அமையுமோ அதைவிட பன்மடங்கு கலையுலக நட்சத்திரங்கள் ஒன்று கூடி 'அண்ணாசாலையில்' உலாவந்த காட்சி, திரண்டு வந்த பல்லாயிரக்

(2-ம் பக்கம் பார்க்க)

### லட்சம் பேர் கைதாவோம் என முன்கூட்டியே அறிவித்துள்ளதன் மர்மம்

# கலவரத்தை தூண்டிட கருணாநிதி திட்டம்

### புரட்சிச்செல்வி ஜெயலலிதா எச்சரிக்கை

கிருஷ்ணகிரி, நவ. 22- அமைதிப் பூங்காவாக இருக்கும் தமிழகத்தில், போராட்டம் நடத்தி லட்சம் பேர் கைதாவோம் என முன்கூடியே அறிவித்துள்ளதின் மூலம், கலவரத்தைத் தூண்டிவிட கருணாநிதி திட்டம் தீட்டியுள்ளார் என கழக கொள்கைபரப்புச் செயலாளர் புரட்சிச் செல்வி ஜெயலலிதா எச்சரித்துள்ளார்.

கிருஷ்ணகிரியில் நடைபெற்ற பிரம்மாண்டமான கழக பொதுக் கூட்டத்தில் கழக கொள்கை பரப்புச் செயலாளர் புரட்சிச்செல்வி ஜெயலலிதா பேசுகையில் கூறியதாவது:—

இதற்கு முன்னால் நாடு விடுதலை பெற்ற பிறகு உங்கள் தர்மபுரி மாவட்டம் எப்படி இருந்தது? புரட்சித் தலைவர் ஆட்சியில்-புரட்சித்தலைவர் அரசு அமைந்த பின்னால் உங்கள் மாவட்டம் எப்படி முன்னேறி இருக்கிறது என்பதனை எண்ணிப் பார்க்கவேண்டும்,

இன்றைக்கு ஒருபுறம் தொழில்துறையில் தர்மபுரி மாவட்டம் வேகமாக முன்னேறிக்கொண்டிருக்கிறது பல்வேறு தொழிற்சாலைகள் துவங்கப்பட்டிருக்கின்றன இன்னும் துவங்கப்படருக்கின்றன.

மொத்தம் 9 மிகப் பெரிய நீர் தேக்கங்கள் புரட்சித்தலைவர் ஆட்சியில் உங்கள் மாவட்டத்தில் கட்டப்பட்டு வருகின்றன.

இதற்கு முன்பு காங்கிரஸ் ஆட்சியில் கிருஷ்ணகிரி நீர்த்தேக்கத்தை மட்டும் கட்டினார்கள்.

கருணாநிதி ஆட்சியில் ஒண்ணே ஒண்ணு கண்ணே கண்ணு, போனால் போகட்டும் என்று சின்னாறு பச்சப்பள்ளி நீர்த்தேக்கத்தைக் கட்டினார்,

### ஒன்பது நீர்த்தேக்கம்

ஆனால் இன்றைக்கு புரட்சித்தலைவர் ஆட்சியில் ஒன்றல்ல இரண்டல்ல. 9 பெரிய நீர்த்தேக்கங்கள் உருவாகி வருகின்றன.

பாம்பாறு அணை, தும்பலஹள்ளி அணை வாணியாறு அணை, ஈச்சம்பாடி அணை, நாகாவதி அணை, தொப்பையாறு அணை, சூளகிரி அணை, முல்லைக்காடு அணை கசரகுளிஹள்ளா அணை ஆகிய நீர்த்தேக்கங்கள் கட்டப்பட்டு வருகின்றன.

இத்தனை காலமாக எல்லோரும் உங்கள் மாவட்டத்தைப்பற்றி என்ன சொல்லிவந்தார்கள்? தமிழகத்திலேயே தர்மபுரி மாவட்டம் தான் மிகவும் பின்தங்கிய மாவட்டம் என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள் இல்லையா?

ஆனால் இன்றைக்கு இந்த தொழிற் சாலை

(2-ம் பக்கம் பார்க்க)

# ப. உ. ச கடிதம்

(முதல் பக்கத் தொடர்ச்சி)

கணக்கான மக்களுக்கு சிறப்பு மிகு விருந்தாக அமைந்தது போலும்!

**புதுயுக இயக்குனர் நண்பர் பாரதிராஜா அவர்கள் அரசியல் கட்சி வளையங்களுக்கு அப்பாற்பட்டவர்!**

அவரது சிறப்பான முயற்சியால் உருவானது தான் இந்த கலையுலகத்திருவிழா! பாரதிராஜா கலையுலகில் புதுமைகள் படைத்து திறமையுள்ள புது முகங்களை அறிமுகம் செய்து தனக்கென்று தனி முத்திரை பதித்துக் கொண்டுள்ளவர்! அவர் கை வண்ணம் இந்த கலை விழாவிலும் தெரிந்தது!

**கலையுலகம் தன் தலைமகனுக்குபாராட்டு விழா நடத்தித் தன் தாயுள்ளத்தைக் காட்டிக் கொண்டது!**

**கலைத்தாயின் இளைய தலைமுறையினர் த்ங்கள் அண்ணனுக்கு தங்கள் அன்பைப் பொழிந்துள்ளனர்.**

அரசியல் — காழ்ப்புணர்ச்சி — கருத்துமாறுபாடு இவ்வகளையெல்லாம் கடந்தது தான் 'பாசம்'! இதன் சக்தியை முழுமையாக உணர்ந்த பேரறிஞர் அண்ணா அவர்கள் தன் வெற்றிக்கு ஏணியாகப் பயன் படுத்தினார்கள்! கலையுலகச் சகோதரர்கள் பாச உணர்வால் உந்தப்பட்டு உவகை பொங்க நடத்திய பாராட்டு விழா கலையுலக வரலாற்றில் ஓர் புதுமை!

தொழில் காரணமாக பல்வேறுஊர்களில் இருக்க வேண்டியவர்கள் சிரமம் பாராது வலியவந்து தங்கள் உள்ளக்கிடக்கையை உணர்த்த வந்தது கால வெள்ளத்தில் கலைத் தாய் கண்ட அற்புதக் காட்சியாகும்!

**தமிழக முதல்வர் மாண்புமிகு புரட்சித் தலைவருக்கு சென்னைப் பல்கலைக்கழகம் 'டாக்டர்' பட்டம் வழங்கி மனிதாபிமானத்துக்கு இலக்கணமாக விளங்கும் பெருமனிதனைப் பாராட்டி தன் மணிமகுடத்தில் மேலும் ஓர் வைரத்தைப் பதித்துக் கொண்டது!**

கலையுலகத்தோர்...'முதல்வர்' என்பதற்காக அல்ல, தங்கள் மூத்த 'அண்ணன்' என்பதற்காக அவருக்குக் கிடைத்த பெருமையைக் கண்டு பூரித்து வாழ்த்தினர்!

அப்பெருமகனோ "தனக்கு அளிக்கப்பட்ட பட்டம் கலையுலகத்தினருக்கு அளிக்கப்பட்ட கௌரவமாகும் என்று மிகப் பெருந்தன்மையோடு தன்னை வளர்த்து ஆளாக்கிய கலைத்தாயின் காலடிக்குக் காணிக்கை ஆக்கினார்!

கலையுலகின் மற்றொருமகனான நடிகர் திலகம் நண்பர் சிவாஜி அவர்கள் அரசியல் கட்சி வளையத்தினை உடைத்துக் கொண்டு வந்து வெள்ளை உள்ளத்தோடு தன் அண்ணனை புரட்சித்தலைவரைக் கட்டித் தழுவி மாலையிட்டு மரியாதை செய்து ஈன்றவள் உணவளித்து உபசரித்ததை நினைவு கூர்ந்து பாச உணர்வை வெளிக்காட்டியதோடு தங்களைப் பிரித்து வைத்த அரசியலினை நொந்து கொண்டதும், ''அண்ணன் தம்பி என்று பாச உணர்வை, உறவை எந்த அரசியல் சக்தியாலும் பிரிக்க முடியாது'' என்று கூறி தன் உள்ள உணர்வினைப் பகிர்ந்து கொண்டதும்அன்பின் அடையாளமாகும்!

**நண்பர் பாரதிராஜா அவர்களின் முயற்சியால் வெளிப்பட்ட இந்த பாச உணர்வு கலைஞர்களிடையே நிலைக்க வேண்டும் என விரும்புகிறோம்.**

**நிலைக்கும்' என்று நம்புகிறோம்! நிலை குலையாதிருக்க வாழ்த்துகிறோம்!**

காட்சிகளைப் பாடமாக்கி கதையினைத் தொகுப்பதில் தனக்கென்று தனி முத்திரைகளைப் பதித்துக் காட்டும் நண்பர் பாரதிராஜா அவர்கள் புதுமைகளைப் படைத்து வியப்பூட்டிய தன் பாணியை விழா எடுப்பதிலும் புதுமையை உருவாக்கியது அவரின் திறமைக்கும் உழைப்பிற்கும் மற்றொரு எடுத்துக் காட்டாகும்!

**புரட்சித்தலைவருக்கென்று நடத்தப்பட்ட இப்பாராட்டு விழாவின் உச்ச கட்டமே புரட்சித் தலைவரின் புதுமைப் படைப்பான சத்துணவுத் திட்டத்திற்காக கலைஞர்கள் முதல் தவணையாக அளித்த ரூபாய் பத்து லட்சமாகும்!**

பணத்தின் அளவை விட அப்புனித திட்டத்திற்கு கலைஞர்கள் காட்டிய ஆர்வப் பெருக்குதான் முக்கியமாகும்!

வரப்புயர்ந்தால் நீர் உயரும்! நீர் உயர்ந்தால் நெல் உயரும்! நெல் உயர்ந்தால் குடி உயரும்! குடி உயர்ந்தால் கோன் உயரும்! இவைகளை உள்ளடக்கி மன்னனை வாழ்த்திய போது 'வரப்புயர' என்று வாழ்த்தினாள் அவ்வை மூதாட்டி.

'குழந்தைகள் வாழ்ந்தால் குடிவாழும்! குடி வாழ்ந்தால் நாடு வாழும்! நாடு வாழ்ந்தால் நலிவு நீங்கி நோய் தொலைந்து பகை மறைந்து. 'பொலிவு' பொங்கும்' என்ற தத்துவத்தை உள்ளடக்கி 'சத்துணவுத் திட்டத்தை' கொண்டு வந்தார் புரட்சித்தலைவர் அவர்கள்!

இந்த உண்மையினை உணர்ந்து தங்களின் காணிக்கையினை நல்கி 'பசியாறும்' குழந்தைகளும், பசி தீர்ந்ததால் முகம் மலர கண்ட தாய்மார்கள் நெஞ்சங்களும் அளிக்கும் வாழ்த்துக்களில் பங்கேற்றனர்!

கலைஞர்களின் இந்தச் சிறப்புமிக்க செயல்தான் அவர்கள் எடுத்த விழாவினை விட, அளித்த பாராட்டுரைகளை விட, காட்டிய பாசஉணர்வுகளை விட மிகவும் இனிப்பானது மாண்புமிகு புரட்சித் தலைவருக்கு!

விழாவில் பங்கேற்ற கலையுலக இளவரசர்களான பாக்யராஜ், கமல், ரஜினி, பிரபு, டி.ராஜேந்தர் இளவரசிகளான ஸ்ரீதேவி - ராதா - நளினி-மூத்தவர்களானாலும் முடிசூடாமன்னர்களாகஇன்னும் மிளிரும் அருமைச் சகோதரர் சிவாஜி - ஜெமினி - மேஜர் கே. ஆர். விஜயா-விஜயகுமாரி மனோரமா நகைச்சுவை வேந்தர்களான நண்பர் தங்கவேலு நாகேஷ் இசையமைப்பாளர்கள் சங்கர்-கணேஷ், கங்கை அமரன், பல துறைகளிலும் சிறப்புப் பெற்ற பஞ்சு அருணசலம் போன்ற பெருமை சேர் கலைஞர்கள் காட்டிய ஆர்வப் பெருக்கினை நினைக்குந்தோறும் நெஞ்சம் நெகிழ்கிறது! தங்களின் மூத்த சகோதரனுக்கு நமது தலைவருக்கு தமிழக மக்களின் நம்பிக்கை நட்சத்திரத்திற்கு சிறார்களின் பசிப்பிணி போக்க வந்த பெருந்தகைக்கு, ஏழைகளின் துயர் துடைக்க வந்த ஏந்தலுக்கு நடத்திக் காட்டிய விழாவிற்கும் பெருந்தன்மையோடு அளித்த காணிக்கைக்கும் முதல் தவணை—மறக்க மாட்டார்கள் என்று நம்புகிறேன் கழகத்தின் சார்பில் நன்றியினையும் இருபத்தைந்து இலட்சத்திற்கும் அதிகமான கழக — மன்ற — மகளிர் உறுப்பினர்கள் சார்பில் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புள்ள

**ப. உ. ச.**

# புரட்சிச்செல்வி எச்சரிக்கை...

(முதல் பக்கத் தொடர்ச்சி) களெல்லாம் கட்டப்பட்டு முடிந்து விட்டால், இந்த நீர்த் தேக்கங்களெல்லாம் திறக்கப்பட்டு விட்டால் அதன் பிறகு தமிழகத்திலேயே தர்மபுரி தான் முன்னேறிய மாவட்டமாக விளங்கும்.

(பலத்த கைதட்டல்)

இந்தசாதனையை செய்தது புரட்சித் தலைவர் அரசு என்பதனை மறந்து விடக் கூடாது.

கருணாநிதி, புரட்சித் தலைவர் ஆட்சி அமைந்த நாள் தொட்டு ஏதாவது போராட்டம் நடத்திக் கொண்டே இருக்கிறார் போராட்டம் அறிவிக்காத நாளே இல்லை.

இத்தனைக்கும்இதுவரை ஒரு போராட்டம் கூட வெற்றிபெற்றதேஇல்லை எல்லாம் புஸ்வாணமாகி விட்டது இருந்தாலும் அவர் ஓய்ந்தபாடில்லை.

இப்போது விலைவாசி ஏற்றத்தை எதிர்த்து கருணாநிதி 15 கட்சி கூட்டணியினருடன் சேர்ந்து போராட்டம் நடத்தப் போகிறாராம்.

இந்தப் போராட்டத்தில் ஒருலட்சம்தொண்டர்கள் சிறைக்குச் செல்ல தயாராக இருக்கிறார்கள். என்று அவர் அறிவித்திருக்கிறார்.

தயாராக இருக்கிறோம் என்று கூட கூறவில்லை. ஒருலட்சம் தொண்டர்கள் சிறைக்குச் செல்வார்கள் என்று கருணாநிதி அறிவித்திருக்கிறார்.

இதற்கு என்னபொருள் என்பதனை நீங்கள் உணரவேண்டும்,

## ஜனநாயகம் வழங்கும் உரிமை

ஜனநாயக சட்டப்படி அமைதியான முறையில் போராட்டம் நடத்த அனைவருக்கும் உரிமை இருக்கிறதுஅதுஜன நாயகம் வழங்கும் உரிமை. அந்த உரிமையை எவரும்மறுக்க முடியாது.

ஆனால் போராட்டம் துவங்குவதற்கு முன்னாலேயே ஒரு லட்சம் பேர் சிறைக்கு செல்லத் தயாராக இருக்கிறோம் என்று சொன்னால் அதற்கு என்ன பொருள்?

அப்படியானால் கருணாநிதி இந்தப் போராட்டத்தை அமைதியாக நடத்தப்போவதில்லை, அவர் அராஜகத்தை உண்டாக்கப் போகிறார், வன்முறையை உண்டாக்கப் போகிறார். கலவரத்தை உண்டாக்கப் போகிறார் அதற்கு இப்பொழுதே திட்டம் தீட்டி இருக்கிறார் என்று தான் பொருள். இல்லையென்றால் அமைதியாகப் போராட்டம்நடத்தினால் அவர்கள் ஏன் சிறைக்குச் செல்ல வேண்டும்?

காவல்துறையினர் ஏன் அவர்களை கைது செய்ய வேண்டும்?

## அமைதிப் பூங்கா

இன்றைக்கு இந்தியாவிலேயே தமிழகம் தான் புரட்சித்தலைவர் ஆட்சியில் அமைதிப்பூங்காவாக இருக்கிறது. அது கருணாநிதிக்குபொறுக்கவில்லை.

அதனால்தான் இந்த அமைதி சூழ் நிலையை எப்படியாவது குலைக்க வேண்டும், கெடுக்கவேண்டும் என்பதற்காக இப்படி ஒரு போராட்டத்தை அவர் அறிவித்திருக்கிறார்.

வேடிக்கை என்னவென்றால், விலைவாசி ஏற்றம்! என்று காரணத்தைக் கூறியிருக்கிறார்.

இந்தியாவில் யார் வேண்டுமானாலும் விலைவாசி ஏற்றத்தைப் பற்றி பேசலாம். ஆனால் கருணாநிதி அதைப்பற்றி பேசுவது அவருக்கே நல்லதல்ல.

ஏனென்றால் விலைவாசி ஏற்றம்-விலைவாசி உயர்வு என்ற ஆயுதத்தை அவர் ஏந்தினால் அது அவரையே திருப்பித்தாக்கும்.

நீங்களெல்லாம் மறந்திருக்க மாட்டீர்கள்கருணாநிதி ஆட்சிகாலத்தில்அவர் லஞ்சத்திற்குஆசைப்பட்டு எப்படிப் பஞ்சத்தை உண்டாக்கினார்; தமிழனையும், தமிழச்சியையும் எப்படி அவர் பட்டினி போட்டார்; லட்சக்கணக்கான நெல் மூட்டைகளை கேரளத்திற்கு கடத்தி விட்டு தமிழகத்தில் செயற்கை பஞ்சத்தை உருவாக்கினார்.

அன்றைக்கு கிலோ அரிசி 10 ரூபாய், படிஅரிசி 12 ரூபாய் என்று விற்றது. 10 ரூபாய், 12 ரூபாய் கொடுத்தாலும் அன்றைக்கு அரிசி கிடைக்கவில்லை, அத்தகைய அவல நிலையை தமிழகத்தில் உண்டாக்கியவர் கருணாநிதி.

அவர் இன்றைக்கு விலைவாசி ஏற்றத்தைப் பற்றி பேசுகிறார்.

இன்றைக்கு புரட்சித் தலைவர் ஆட்சியில் நல்ல அரிசி கிலோ 2 ரூபாய், ரூ. 1.75 பைசாவிலைக்கு நியாய விலைக் கடைகளில் கிடைக்கிறது.

அந்தக் கருணாநிதிக்கு பின்னே 15 கட்சிக் கூட்டணியினரும் கடைசி சீடர்களாகப் போய் நிற்கிறார்கள். கம்யூனிஸ்டு தோழர்களும் கருணாநிதிக்குப் பின்னே போய் நிற்கிறார்கள்.

பழைய சம்பவங்களையெல்லாம் மறந்துவிட்டு அவர்கள் இப்படி போகும் போது - கருணாநிதிக்குப் பின்னால்போகும் போது, என்ன சொல்லத் தோன்றுகிறது,

''கண்போன போக்கிலே
காலபோகலாமா?
கால் போன போக்கிலே
மனம் போகலாமா?
மனம்போன போக்கிலே
மனிதன் போகலாமா?
மனிதன் போன
பாதையை
மறந்து போகலாமா?

அந்த கருணாநிதி போன பாதையை அவர்கள் மறந்து போகலாமா?

(பலத்த கைதட்டல்)

கம்யூனிஸ்டு கட்சி தோழர்களுக்கும் 15 கட்சி கூட்டணியினருக்கும் நான் சொல்லிக்கொள்வேன்;

''ஊர்பார்த்த உண்மைகள்
உனக்காக வாழும்
உணராமல் போவோர்க்கு
உதவாமல் போகும்''

## கருணாநிதிக்கு தெரிந்த அரசியல்

எனவே அவர்கள் தான் இது நியாயமா? சரியா? முறையா என்பதைப்பற்றி எண்ணிப்பார்க்க வேண்டும்.

கருணாநிதிக்கு இப்போது அரசியலெல்லாம் மறந்துபோய் விட்டது.

புரட்சித்தலைவர் அவர்களின் பேச்சை திரித்துக் கூறுவது, கேட்காத கேள்விகளுக்கு வீராவேசமாக பதில் சொல்லுவது இதுதான் இப்போது கருணாநிதிக்குத் தெரிந்த அரசியல்.

இவ்வாறு புரட்சிச் செல்வி ஜெயலலிதா கூறினார்.

(பேச்சின் மற்றபகுதி நாளை வெளிவரும்)

# அமைச்சர் ஆர்.எம்.வீ. அறிவிப்பு... (1-ம்பக்கத் தொடர்ச்சி)

அரசுக்கு ஏற்பட்டு இருக்கிறது.

இந்த சிலை திருடியவர்கள் தொடர்ந்து குற்றத்தை செய்து வருகிறார்களா என்று தெரியவில்லை.

இந்த வழக்கை ஏன் அவசர அவசரமாக ஒரே நாளில் விசாரித்துமுடித்து விட்டார்கள் என்பதனையும் கண்டறியவேண்டும்.

இப்போது அந்தச்சிலைகள் உண்மையான சிலைகள் தானா என்ற அய்யப்பாடும் எழுந்து இருக்கிறது.

இதைத் தொடர்ந்து அரசு இந்த வழக்கு பற்றி மீண்டும பரிசீலித்து தீவிர நடவடிக்கை எடுக்கும் என்பதை கூறிக் கொள்கிறேன். என்று அமைச்சர் ஆர். எம். வீ கூறினார்.

திண்டிவனம் ராமமூர்த்தி:-

இந்த வழக்கை தொடர்ந்த காவல் துறை அதிகாரிகள் இன்னமும் பதவியில் இருப்பார்கள் என்று எண்ணுகிறேன். வழக்கை விசாரித்து தீர்ப்பு வழங்கிய நீதிபதியும் பதவியில் இருப்பார் என்று கருதுகிறேன்; இந்த வழக்கு பற்றி மீண்டும் விசாரணை செய்ய காலவரம்புகுறுக்கே நின்றாலும் இலாகா பூர்வமான நடவடிக்கை எடுக்க வேண்டும்.

எந்தசூழ்நிலையில்காவல் துறை அதிகாரிகளும், நீதிபதியும் இப்படி அவசரமாக வழக்கை முடித்து விட்டார்கள்என்பதையும் கண்டறிய வேண்டும்.

அமைச்சர் ஆர்.எம்.வீ.:- திருடப்பட்ட சிலைகள் ஒன்று இரண்டு அல்ல. 46 பஞ்சலோக சிலைகள், இவைகள் எந்த எந்த ஆண்டில்திருடப்பட்டவை என்றும் கண்டு பிடிக்க வேண்டும்.

## திட்டமிட்டு திருட்டு

திட்டமிட்டு பலஆலயங்களில் பல ஆண்டுகளாக திருடப்பட்டு இருக்க வேண்டும்.

களவுபோனஇடங்களில் இருந்து புகார் வந்திருக்கிறதா என்றும்கண்டறிய வேண்டும்.

இந்தவழக்கை மீண்டும் தொடர நடவடிக்கை எடுப்பது பற்றியும்சட்டரீதியாக என்னென்ன நடவடிக்கை எடுக்கவேண்டும்என்பதுபற்றியும் அரசு தீவிரமாக ஆராயும்.

வெளிநாடுகளுக்கு சிலைகளை அனுப்புவதில் ஈடுபட்டு இருக்கும் ஒரு சதிக்கும்பல் இதன் பின்னணியில்இருக்கிறதா என்றும் கண்டு பிடிக்கவேண்டும்.

இப்போது இந்தியாவந்துள்ள பிரிட்டிஷ் ராணி எலிசபெத் முன்பு ஒரு முறை வந்தபோது அவருடன் வந்த வெளி நாட்டுககாரர் ஒருவரால்தான் தமிழ்நாட்டில் இருந்து திருட்டுப்போன சிவபுரம் நடராசர் சிலைபற்றிய விவரம் தெரியவந்தது.

நமது காவல்துறையினர் அந்த சிலையை கண்டு பிடிக்கவில்லை.

காவல் துறையினர் அங்கே சென்றபோது தமிழ்நாட்டில் இருந்து கடத்தப்பட்ட ரூ. ஒரு கோடி மதிப்புள்ள சிலையும் கண்டு பிடிக்கப் பட்டது.

இங்கே இருந்த புகழ்பெற்ற சிவபுரம் நடராசர் சிலை ஒன்றை அவர் பார்த்தபோது இது போன்ற சிலையை அங்கேயே (வெளிநாட்டில்) பார்த்து இருக்கிறேன் என்றார்.

அதன் பிறகுதான் காவல் துறையினர் தொடர்ந்து சென்று மேற்கொண்டு விவரங்களைக் கண்டுபிடிக்க முடிந்தது. கோயிலில் வைக்கப்பட்டு இருக்கும் 46 பஞ்சலோக சிலைகளும் உண்மையான சிலைகள் தானா?மாற்றப்பட்ட போலிச் சிலைகளா என்பது பற்றிய விவரங்களை அரசு கண்டறியும்.

ஒருகூட்டம் திட்டமிட்டு இதைச் செய்து வருகிறது என்று தான் தெரிகிறது.

அரசு இதுகுறித்து தீவிர நடவடிக்கை எடுக்கும்.

ஏ. ஆர் தாமோதரன்:- தமிழகத்தின் விலை உயர்ந்த பொக்கிஷங்களான சிலைகள் திருடப்படுவதை உடனடியாக நிறுத்த வேண்டும்.

இந்தச் சிலைகள் வழிபாட்டுக் குரியவை.

விலை மதிப்பற்ற சிலைகளின் படங்களை அறநிலையத்துறையினர் ஒரு புத்தகமாக போட்டு வெளியிடவேண்டும் சம்பந்தப்பட்ட 46 சிலைகள் உடைய படங்களையும் வெளியிட வேண்டும். சிலை திருட்டு சதி திட்டம் ஒழிக்கப்பட வேண்டும்.

அமைச்சர் ஆர்.எம்.வீ.:- ஒருசிலர்கேட்பதற் கிணங்க சம்பந்தப்பட்ட 46 சிலைகளின் படங்கள் வெளியிடப் படும் அந்தப் படங்களை அவையிலும் வைக்க முயற்சி செய்கிறேன்.

தமிழகத்தில் எந்த எந்தக் கோயில்கள், மற்றும் இடங்களில் உள்ள மதிப்புவாய்ந்த சிலைகள் எவையெவை என்பது பற்றி பட்டியல் படங்கள் ஆகியவற்றையும் வெளியிட அரசு நடவடிக்கை எடுக்கும்.

இந்த 46 பஞ்சலோக சிலை திருட்டு பற்றி மீண்டும் வழக்கு தொடர அரசு மேற்கொண்டு நடவடிக்கை எடுப்பது பற்றி பரிசீலிக்கும்

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.

மேலவையில்

## சட்டத் திருத்தங்கள் நிறைவேற்றம்

சென்னை, நவ 22— தமிழ்நாடு கேளிக்கை வரி திருத்தச் சட்டமும் பொது விற்பனை வரி திருத்தச் சட்டமும் மேலவையில் இன்று விவாதத்திற்கு வந்தது.

விவாதத்திற்கு பதிலளித்து அமைச்சர் எஸ் டி. எஸ் பேசினார். அதன் பின்பு சட்டத்திருத்தங்கள் நிறைவேறியது.

## முகமூடி கொள்ளையர் கைது

முதல் பக்கத் தொடர்ச்சி கூட்டத்தைச் சேர்ந்த திருடன் என்று கூறப்படும் ஒருவனை இன்று போலீசார் வியாசர் பாடியில் பிடித்தனர்.

ருத்திராட்சமாலை அணிந்து வியாசர்பாடி பகுதியில் இந்த ஆசாமி திரிந்தான்.

அந்தப்பகுதி மக்கள் சந்தேகம் ஏற்பட்டு புகார் தெரிவிக்க போலீசார் பிடித்தனர்.

இந்தி மட்டுமே இவன் பேசுகிறான். டெல்லியைச் சேர்ந்தவனாம் பெயர் நாகேஷ்குமார்என்கிறான் வயது 35 இருக்கும்

கையில் ஒரு பொட்டலம் வைத்துள்ளான்.

இவனிடம் தொடர்ந்து விசாரணை நடந்து வருகிறது.

பொதுச் செயலாளர்

## ப. உ. ச. முன்னிலையில் 150 பேர் கழகத்தில் இணைந்தனர்

சென்னை, நவ, 22— கழகப் பொதுச் செயலாளர் ப. உ. ச முன்னிலையில் 150 பேர் இன்று கழகத்தில் இணைந்தனர்

வடாற்காடு மாவட்டம் வாலாஜா ஒன்றியத்தைச் சேர்ந்த அம்மூரிலிருக்கும் 125பேரும்மாந்தாங்கலில் இருக்கும் 25 பேரும் தலைமைக் கழகத்தில் இன்று தங்களை கழகத்தில் இணைத்துக்கொண்டனர் வாலாஜா ஒன்றிய கழக செயலாளர் நா. ரேணு அப்போது உடன் இருந்தார்.

## காஞ்சியில் கழகக் கூட்டம்

காஞ்சிபுரம், நவ. 22— காஞ்சிபுரம் காந்தி ரோடு தேரடி அருகில் இன்று (22-ந்தேதி) மாலை சுப்பையன் தலைமையில் கழகக் கூட்டம் நடைபெறுகிறது.

கூட்டத்தில் கழகப் பொருளாளர் எஸ், மாதவன், அமைச்சர்கள் எஸ். ஆர். ராதா, யூசுப். மற்றும் வெங்கட சுப்பிரமணியம் எம். எல் ஏ, காஞ்சி பன்னீர் செல்வம் கே. பாலாஜி, ராஜேந்திரன், ஆகியோரும் மற்றும் பலரும் பேசுகிறார்கள்.

அமைச்சர்முயற்சிவெற்றி

டான்சி தொழிலாளர்

## 420 பேர் வேலைக்கு திரும்பினர்

சென்னை, நவ 22— தமிழகம்முழுவதும் உள்ள டான்சி தொழிற்சாலை தொழிலாளர்கள் 420 பேர் லே-ஆப்காரணமாக 2 மாதத்திற்கு முன் வேலை இழந்தனர். அவர்கள்தங்களுக்கு மீண்டும் வேலை தருமாறு கோரினார்கள்.

ஊரகத் தொழில் அமைச்சர் நாமக்கல் அருணாசலம் இதுகுறித்துபேச்சுவார்த்தை நடத்தியதை அடுத்து 420 தொழிலாளர்களும் வேலைக்குத் திரும்பினர்.

தலைமைக் கழக அறிக்கை எண 184 83

## தென்னாற்காடு மாவட்டக் கழக தோழர்களுக்கு

தென்னாற்காடு மாவட்டம் திருநாவலூர் தொகுதி மடப்பட்டைச் சேர்ந்த

இல. ஆறுமுகம்
(முன்னாள் எம். எல். ஏ.)

கழகத்தில் இணைக்கப்படவில்லை. ஆதலால் கழகத் தோழர்கள் அவருடன் எவ்வித தொடர்பும் வைத்துக் கொள்ள வேண்டாம் எனக் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

கழக நிறுவனத் தலைவர் மாண்புமிகு புரட்சித் தலைவர் அவர்களின் ஒப்புதலுடன் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

**ப. உ. சண்முகம்**

சென்னை-14 — பொதுச் செயலாளர்,
22-11-83 — அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

தலைமைக் கழக அறிக்கை எண் 186-83

## மேற்கு முகவை மாவட்டம் விருதுநகர்-காரியாப்பட்டி கழகத் தோழர்களுக்கு

கழகத்தின் விதிமுறைகளுக்கு மாறாக நடந்து, கழகத்தின் நற்பெயருக்கு களங்கம் விளைவிக்கும் வகையில் செயல்பட்ட காரணத்தால், மேற்கு முகவை மாவட்டம் விருதுநகர் ஒன்றியத்தைச் சேர்ந்த

கே. செல்லசாமி
(ஒன்றிய செயலாளர், விருதுநகர்)
காரியாப்பட்டி ஒன்றியத்தைச் சேர்ந்த
எம். செல்வம்
(ஒன்றிய செயலாளர்-காரியாப்பட்டி)

ஆகியோர் இன்றுமுதல் கழகத்தின் சாதாரண உறுப்பினர் பொறுப்பு உட்பட அனைத்துப் பொறுப்புக்களிலிருந்தும் நீக்கப்படுகிறார்கள்.

கழக, சார்பு மன்றத்தோழர்கள் யாரும் அவர்களுடன் எவ்விதத் தொடர்பும் வைத்துக்கொள்ள வேண்டாம் என்று கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

கழக நிறுவனத்தலைவர் புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும், பொதுச்செயலாளர் திருமிகு. ப. உ. ச. அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

**என். ராசாங்கம்**

சென்னை-14 — அமைப்புச்செயலாளர்
22-11-83 — அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

தலைமைக் கழக அறிக்கை எண்: 185-83

## தர்மபுரி மாவட்ட பர்கூர் ஒன்றிய கழகத் தோழர்களுக்கு

கழகத்தில் இருந்து நீக்கி வைக்கப்பட்டு இருந்த தர்மபுரி மாவட்டம் பர்கூர் ஒன்றிய ஆம்பள்ளியைச் சேர்ந்த

டி. உதயகுமார்
(மாவட்டப் பிரதிநிதி)

தனது செயலுக்கு வருந்தி தன்னை மீண்டும் கழகத்தில் இணைத்துக் கொள்ள வேண்டும் என்று நேரிலும் கடிதம் மூலமும் விடுத்த வேண்டுகோளினை ஏற்று அவர் இன்று முதல் கழகத்தில் இணைந்து முன்பிருந்த பொறுப்பில் பணியாற்ற அனுமதிக்கப்படுகிறார்.

கழக நிறுவனத் தலைவர் மாண்புமிகு புரட்சித் தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும், பொதுச்செயலாளர் திருமிகு ப. உ. ச அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

**என். ராசாங்கம்**

சென்னை—14 — அமைப்புச் செயலாளர்
22—11—83 — அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

## மன்ற நிர்வாகிகள் தேர்தல்: முக்கிய அறிவிப்பு

எம் ஜி. ஆர். மன்றங்களுக்காக நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்படுவது குறித்தும், இதுபற்றிய விதிமுறைகள் குறித்தும் ஏற்கெனவே அறிவிப்புகள் வெளியிடப்பட்டுள்ளன.

நிர்வாகிகள் தேர்தல் தேதிபற்றியும், நிர்வாகிகளை எப்போது தேர்ந்தெடுப்பது என்பது பற்றியும் கழக நிறுவனத் தலைவர் புரட்சித் தலைவர் தான் முடிவு செய்வார்.

மன்றத் தேர்தலில் போட்டியிட விரும்பும் உறுப்பினர்கள், கழக நிறுவனத்தலைவர் புரட்சித் தலைவர் அவர்களுக்கு வேட்பு மனுச் செய்த விபரங்களை ஒரு தாளில் எழுதி நகலை, புரட்சித்தலைவர் 10, ஆற்காடு முதலித் தெரு, தியாகராயநகர் சென்னை-17 என்ற முகவரிக்கு அனுப்பி வைக்கக் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

ஏற்கெனவே அறிவிக்கப்பட்ட நவம்பர் 26, 27 தேதிகளில் நடைபெற விருந்த பரிசீலனைக் குழுவின் வருகை பற்றி டிசம்பர் இரண்டாவது வாரத்தில் அறிவிக்கப்படும்.

மன்ற நிர்வாகிகள் தேர்தலுக்கான வேட்புமனு தாக்கல் செய்வதற்கான காலவரம்பு டிசம்பர் 7-ம் தேதிவரை நீடிக்கப்படுகிறது.

**பி முசிறிப்புத்தன்**

சென்னை-14 — தலைவர்
22-11-83 — அனைத்துலக எம். ஜி. ஆர் மன்றம்

## அமைச்சர் திருநாவுக்கரசு டெல்லி செல்கிறார்

சென்னை, நவ. 22— தொழில் அமைச்சர் திருநாவுக்கரசு நாளை புதன் மாலை புதுடெல்லி புறப்பட்டு செல்கிறார்.

24-ந்தேதி அவர் மத்திய அமைச்சர்களைச் சந்தித்து பேசுகிறார்.

புதுடெல்லியில் நடந்து வரும் தொழில் வர்த்தகப் பொருட்காட்சியில் 25-ந் தேதிமாலை 5-30மணிக்கு தமிழ்நாடு தினம் கொண்டாடப்படுகிறது.

இந்த விழாவிற்கு அமைச்சர் திருநாவுக்கரசு தலைமை வகிக்கிறார். மத்திய அமைச்சர் ஆர். வெங்கட்ராமன் விழா வைத் துவக்கி வைக்கிறார். அமைச்சர் திருநாவுக்கரசு வரும் 26-ந் தேதி சென்னை திரும்புகிறார்.

கர்நாடக முதல்வர்

## ஹெக்டே மகள் திருமணம்

பெங்களூர், நவ. 22— கர்நாடக முதல்வர் ராமகிருஷ்ண ஹெக்டேயின் 2வது மகளான, சம்தாவுக்கும் தொழிலதிபர் கோபாலுக்கும் திருமணம் சிறப்பாக நடந்தது.

இத்திருமண விழாவில் மாநிலகவர்னர் ஏ.என். பானர்ஜி, மத்திய அமைச்சர்கள் வீரேந்திரபாட்டில், ஜாபர்ஷெரீப், ஜனதா கட்சித் தலைவர் சந்திரசேகர் மற்றும் ஏராளமான பிரமுகர்களும் பங்கேற்றனர்.

பாரி இலக்கிய

தொடக்க விழா

## அமைச்சர் காளிமுத்து பங்கேற்கிறார்

சென்னை, நவ. 22- மேற்கு மாம்பலம்—நைட்டிங்கேல் மெட்ரிகுலேஷன் பள்ளி பாரி இலக்கிய மன்றத் தொடக்க விழாவில் அமைச்சர் கா. காளிமுத்து பங்கேற்கிறார்.

இன்று (22ந்தேதி) மாலை 4-மணியளவில் பள்ளித் தாளாளர் பச்சமுத்து தலைமையில் விழாநடைபெறும். புலவர் அன்புவரவேற்புரையாற்ற கவிஞர் மணிமொழி, புலவர் வை. சிவஞானம், புலவர் எம்.இலட்சுமணன் ஆகியோர் வாழ்த்துரை வழங்க அமைச்சர் காளிமுத்து பாரி இலக்கிய மன்றத்தைத் தொடங்கி வைத்து சிறப்புரையாற்றுவார்.

புலவர் பாண்டியன் நன்றி கூறுகிறார்.

பிரதமர்

## இந்திராவுடன் இலங்கை தமிழர் தலைவர்கள் சந்திப்பு

புதுடெல்லி, நவ. 22— இலங்கைத் தமிழர்பிரச்சினை குறித்து இலங்கை தமிழர் தலைவர்கள் பிரதமர் இந்திரா காந்தியை சந்தித்துப் பேசினார்கள்.

சிவசிதம்பரம், அமிர்தலிங்கம், அமைச்சர் தொண்டமான் ஆகியோர் பிரதமரைச் சந்தித்துப் பேசினர்.

இந்திரா காந்தியின் விசேஷத் தூதுவர் ஜி. பார்த்தசாரதி இலங்கை அதிபர் ஜெயவர்த்தனேயுடன் நடத்திய பேச்சுவார்த்தையில் உருவாகி இருக்கும் சமரச திட்டம் குறித்து இவர்கள் பிரதமரிடம் பேசினார்கள்.

அந்த திட்டம் குறித்து தங்களது கருத்துக்களை பிரதமர் இந்திரா காந்தியிடம் இவர்கள் நேரில் எடுத்துரைத்தனர்.

காமன் வெல்த் மாநாட்டில் பங்கேற்க இலங்கை அதிபர் ஜெயவர்த்தனே நேற்று பிற்பகல் டெல்லி வந்துள்ளார்.

## ஏழை மக்களுக்கு நல்வாழ்வு திட்டங்களை செயல்படுத்த

# பெரும் தொழில்களை அரசு ஏற்கவேண்டும் என்பதே நோக்கம்

## அமைச்சர் பொன்னையன் தகவல்

**சென்னை. நவ. 22. ஏழை எளிய மக்கள் நல்வாழ்வு பெற நலத்திட்டங்களை நிறைவேற்ற பெருந் தொழில்களை அரசே ஏற்பதுதான் இந்த அரசின் நோக்கம் என்று சட்டசபையில் அமைச்சர் பொன்னையன் கூறினார்.**

மதுவிலக்கு திருத்த சட்ட முன்வடிவின் மீது அமைச்சர் பொன்னையன் பேசியதாவது:—

உறுப்பினர்கள் அனைவருமே அரசு பொறுப்பிலே உள் நாட்டில் தயாரிக்கிற சாராயம், அன்னிய நாட்டு மதுவகைகள் ஆகியவற்றை விநியோகம் செய்யும் பொறுப்பை மேற்கொண்டதை பாராட்டி பேசினார்கள்.

அரசு இந்தப் பொறுப்பை மேற்கொண்ட பிறகு கடந்த 4 மாத காலத்தில்மட்டும் கிட்டத்தட்ட 8கோடி ரூபாய் இந்த கழகம் லாபத்தை ஈட்டியிருக்கிறது.

சென்னையிலேசிலருக்கு உரிமம் தருவதற்கு வாய்ப்பில்லாமல் போய்விட்டது என்ற காரணத்திற்காகத் தான் இதை அரசே எடுத்துக் கொண்டது என்று சொன்னார். அது முற்றிலும் தவறான ஒன்றாகும்.

### உச்ச நீதிமன்ற தீர்ப்பு

காரணம் உச்ச நீதி மன்றத்திற்குச் சென்ற அந்த வழக்கில் கூட இந்த மொத்த விற்பனைஉரிமையில், தற்போதிருக்கும் முறையை உச்ச நீதி மன்றம் சரி என்றுதான் சொல்லியிருக்கிறது.

சென்னை மாநகரைப் பொறுத்த வரைக்கும் மக்கள் அதிகமாக உள்ள பகுதிஎன்ற காரணத்தால் ஏற்கனவே தந்த ஒன்றைச் சரியான ஒன்று என சொல்லிவிட்டு மேற்கொண்டும் ஒன்றிரண்டு முடியுமா என்ற ஆலோசனையை அரசுக்கு நல்கியிருந்தது. இதுதானே தவிரமற்றபடியாக அந்த முறை தவறு என்று உச்ச நீதிமன்றம் ஒருகாலத்திலும் சொல்லவில்லை. ஆனால் மேலும் இந்த சென்னைக்காகமட்டும் என்று சொன்னால் தமிழகத்திலே இருக்கிற அத்தனை மொத்த விற்பனை எரிசாராயக் கலவை, அதாவது, சாராயம் மற்றும் ஐ. எம். எப். எஸ். போன்ற அத்தனை பொருட்களையும் மொத்த விற்பனைக்கு உட்படுத்த வேண்டுமென்ற நோக்கோடு, அரசே பொறுப்பேற்க வேண்டுமென்ற நோக்கோடுதான் முதற் கட்டமாக அரசு இந்தப் பணியை மேற்கொண்டது என்பதை நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

### சில்லறைக் கடைகளுக்கு உரிமம்

பல இடங்களில் குறிப்பாக பள்ளிகள், கல்லூரிகள், ஆலயங்கள், மருத்துவமனைகள் இது போன்ற இடங்களிலும், மக்கள் நெருக்கம் அதிகமாக இருக்கிற பகுதிகளிலும் சில்லறைக் கடைகளுக்கு உரிமம் வழங்கியிருப்பது சரியல்ல என்று சொன்னார்கள்.

இது குறித்து கண்டிப்பான உத்தரவை முதலமைச்சர்இட்டுள்ளார் பள்ளிகளுக்கு அருகிலோ கல்லூரிகள் அருகிலோ, மருத்துவ மனைகளின் அருகிலோ, மக்கள் நெருக்கம் அதிகமாகவுள்ள சாலைகளிலோ கொடுக்கப்பட்டிருந்தால அவற்றையெல்லாம் மாற்றி, அதை மக்கள் நெருக்கம் அதிகம் இல்லாத பகுதிக்கு மாற்ற வேண்டுமென்ற உத்தரவையிட்டு, அதன் மீது தக்க நடவடிக்கைஎடுக்கப்பட்டு வருகிறது.

இந்த நடவடிக்கை மேலும் துரிதமாக்கப்பட்டு உறுப்பினர்கள் கூறியதைப்போல மக்கள் நெருக்கம் அதிகமான பகுதிகளில், முக்கியமான பகுதிகளில் இது போன்ற கடைகள் இல்லாத நிலையை அரசாங்கம் செய்யும்.

### அரசின் நோக்கம்

மது என்பது கூடாத ஒன்றுதான் என்றாலும் கூட, கள்ளச் சாராயம் உயிரைக் கொல்லக் கூடிய ஒன்றாக இருக்கிறதால் தரமாக ஏழை மக்களுக்கு கிடைக்க வேண்டுமென்ற நோக்கத்தோடு தான் இந்த கடைகள் அதிகமாக்கப்பட்டது என்பதை தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். அது தான் நோக்கம்.

ஏழை மக்கள், பாமர மக்கள் எல்லாம் கள்ளச் சாராயத்தைக் குடித்து, உடல்நிலையை கெடுத்து சில நேரங்களில் உயிர் போகிற நிலை கூட ஏற்பட்டது. அதிலிருந்து அவர்களுக்கு விடுதலை தரவேண்டும்.

அரசினுடையவெல்பேர் மெஷர்களை ஈடேற்றுவதற்கு வருமானத்தைப் பெருக்க வேண்டும். இந்த மதுவகைகள் என்பது ஏற்புடையதல்ல என்றாலும் கூட தவிர்க்க முடியாத சூழ்நிலையில் கொண்டு வந்தோம்.

இப்படி இந்த மது விலக்கை தளர்த்தியபிறகு அரசிற்கு வருமானப் பெருக்கம் மிக அதிகமாக ஏற்பட்டிருக்கிறது.

### நல்வாழ்வுத் திட்டங்கள்

ஆனால் இந்த அரசைப் பொறுத்தவரைக்கும் எத்தனையோ பிரச்சினைகள் இன்னும் இருக்கின்றன. கோத்தாரி குரூப், டால்மியா சிமெண்ட், தரங்கதரா கெமிகல்ஸ், இண்டியன் ஆர்கானிக் கெமிக்கல்ஸ், சாகுவாலா மில்ஸ் போன்றவைகள் எல்லாம் வடபுலத்து கோடீஸ்வரர்களிடம் இருக்கின்றன.

இன்னும் குறிப்பாகச் சொல்ல வேண்டுமென்றால் பிர்லா போன்றவர்களெல்லாம் நீலகிரிமாவட்டம்போன்ற பகுதிகளில் தேயிலை, காப்பித் தோட்டங்களை யெல்லாம் வாங்கிவைத்து கோடி கோடியாகக் கொள்ளை இலாபம்அடிக்கிறார்கள்.

படிப்படியாக அரசே பொறுப்பேற்றுக்கொள்ள வேண்டிய பணிகள் எத்தனையோ இருக்கின்றன. இது ஒன்று மட்டும் அல்ல என்பதற்காகத்தான் சொல்கிறேன். படிப்படியாக பல தொழில்களை, இலாபம் வருகின்ற தொழில்களைக் கண்டிப்பாக அரசு ஏற்க வேண்டும். அதனால் அரசுக்கு வருமானம்மிகவேண்டும்

அந்த வருமானத்தைக் கொண்டு மக்களுக்கு நல்வாழ்வுத் திட்டங்களை, வெல்பேர்மெஷர்ஸ் என்று சொல்லக் கூடிய திட்டங்களை ஈடேற்ற வேண்டுமென்பது தான் அரசின் எண்ணம். அந்த அடிப்படையிலே பிரச்சினைகளை இந்த அரசு ஆயும்.

இவ்வாறு அமைச்சர் பொன்னையன் கூறினார்.

தமிழ் நாடு

## வஃபு போர்டு உறுப்பினர்கள்

சென்னை, நவ. 22— தமிழக வஃபுபோர்டிற்கு புதியதாக 11 உறுப்பினர்கள் நியமிக்கப் பட்டுள்ளதாக நீர்ப்பாசனத் துறை அமைச்சர் யூசுப் தெரிவித்துள்ளார்.

தமிழக வஃபுபோர்டிற்கு புதியதாக 11 உறுப்பினர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர். இவர்கள் 1986-ஆம் ஆண்டு அக்டோபர்மாதம் 18-ந் தேதி வரை வஃபு போர்டின் உறுப்பினர்களாக பணியாற்றுவார்கள். உறுப்பினர்கள் விவரம் வருமாறு:-

ஏ. ஜே. அப்துல்ரசாக் (சென்னை புதுக்கல்லூரி) காதர் சுல்தான் (உத்தமபாளையம் வழக்கறிஞர்) அன்வர்தீன்ராமநாதபுரம் ஆனைமலை உசேன் (ஆனைமலை கோவை மாவட்டம்) ஆர். எல். அப்துல் காதர் (ஈரோடு) எம். எஸ். அப்துல் காதர் (சென்னை முன்னாள் மேயர்) ஏ. ஜெயினுலாப்தீன் (வாலாஜாபேட்டை) கே. எம். அப்துல் ரசாக் எம். எல் ஏ. (சென்னை) தமிழ்நாடுஅரசு தலைமை காஜி மௌல்வி காஜி முகமது அஜீசுதின், சிந்தை இஸ்மாயில் (கடலூர், திருச்சி மாவட்டம்) மௌலானா அலிபித்ரத் (சென்னை.)

மேற்கண்ட உறுப்பினர்கள் வஃபு போர்டின் புதிய உறுப்பினர்களாக நியமிக்கப் பட்டுள்ளனர்.

இத் தகவலை நீர்ப்பாசனத்துறை அமைச்சர் யூசுப் தெரிவித்தார்.

விக்கிரம சிங்கபுரம் கழகத் தோழர்கள் கொள்கை பரப்பு செயலாளர் புரட்சிச் செல்வி ஜெயலலிதாவுக்கு வாழ்த்து மடல் அளித்தனர்.

## வங்கக் கடலில் புயல்

சென்னை, நவ. 22— வங்கக்கடலில் உருவாகியுள்ள குறைந்த அளவு காற்றழுத்த மண்டலம் தற்போது புயலாக உருவாகி நிலை கொண்டுள்ளது

இதனால் தமிழ்நாடு மற்றும் கடலோரப்பகுதிகளில் அடுத்த 48மணி நேரத்தில் பலத்த மழைபெய்யக் கூடும் என்று வானிலை ஆராய்ச்சி நிலையம் தெரிவித்துள்ளது.

## ஆந்திராவில் கொத்தடிமைகள் மீட்பு

சென்னை, நவ. 20— ஆந்திர மாநிலத்தில் கொத்தடிமைகளாக இருந்த 105 பேரைசேலம் நகர போலீசார் மீட்டு வந்தனர். 26 குடும்பத்தைச்சேர்ந்தஇவர்கள் அனைவரும் அங்கு 10 வருடங்களாக கொத்தடிமை வேலை செய்து வந்ததாக தெரிகிறது. சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த மாதங்கையன் என்பவர் கொடுத்த புகாரின் பேரில் போலீசார் இந்த 106 பேரையும் மீட்டு வந்துள்ளார்.

# பெரியமாவட்டங்களை 2-ஆக பிரிப்பது பற்றி ஆலோசனை

## மேலவையில் அமைச்சர் எஸ். டி. எஸ். தகவல்

**சென்னை, நவ. 22. பெரிய மாவட்டங்களை இரண்டாக பிரிப்பது பற்றி பல்வேறு விவரங்களின் அடிப்படையில் ஆலோசிக்கப்படும் என மேலவையில் அமைச்சர் எஸ்.டி.எஸ். கூறினார்.**

இன்று சட்ட மேலவையில் சேலம்மாவட்டத்தை இரண்டாகப் பிரித்து, நாமக்கல்லை தனி மாவட்டமாக ஆக்குவது பற்றிய கேள்வி ஒன்றை உறுப்பினர் செ. முத்துசாமி கேட்டார்.

அதற்கு பதிலளித்து வருவாய்துறை அமைச்சர் எஸ். டி. எஸ். கூறியதாவது:-

மாவட்டத்திலுள்ள மக்கள் தொகை, அதன் நிலப்பரப்பு, அது பின்தங்கிய பகுதியா? இப்படிப்பட்ட பல்வேறு விவரங்களின் அடிப்படையில் மாவட்டங்கள் 2-ஆகப் பிரிப்பது குறித்து ஆராயபடுகிறது.

மதுரை, ராமநாதபுரம், திருச்சி, தஞ்சாவூர் வடஆற்காடு, தென்னாற்காடு ஆகிய மாவட்டங்கள், இப்படி 2-ஆக பிரிப்பதற்குரிய பட்டியலில் இடம் பெற்றுள்ளன.

ஒரு மாவட்டத்தைப் பிரிக்கும் போதுஅதற்காக தொடரும் செலவு 45 லட்சம் ரூபாய் ஆகிறது.

தொடராச் செலவோ ரூ. 400 லட்சம் ஆகிறது.

திண்டிவனம் ராமமூர்த்தி (இ. காங்கிரஸ்):- தென்னாற்காடு மாவட்டம் 2- ஆகப்பிரிக்கப் படுமானால் செஞ்சியை திருவண்ணாமலை தாலுகாவுடன் சேர்த்துக் கொள்ளப்படும் என்ற ஒரு கருத்து நிலவுகிறதே? அது உண்மையா?

அமைச்சர் எஸ்.டி.எஸ். அப்படிப்பட்ட பிரச்சினை இப்போது ஒன்றும் எழவில்லை.

அனகாபுத்தூர் ராமலிங்கம் (கழகம்):- செங்கற்பட்டு மாவட்டத்தை இரண்டாகப் பிரிக்கும் எண்ணமிருந்தால் காஞ்சிபுரத்தை ஒரு பகுதிக்கு தலைநகராக ஆக்கி விட்டுவிட்டு செங்கற்பட்டின் வட பகுதிக்கு திருத்தணியை தலைநகராக அமைக்க முடியுமா?

அமைச்சர் எஸ்.டி.எஸ். அந்த பிரச்சினைகளையெல்லாம் பின்னர் பார்ப்போம் அப்படி மாவட்டங்கள் பிரிக்கப்படும் போது இது போன்ற பிரச்சினைகள் பரிசீலிக்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் எஸ். டி. எஸ். கூறினார்.

# புறநகர் பகுதிகளில் பாதுகாப்பிற்காக இளைஞர்கள் ரோந்து

## டி.ஜி.பி. ராதாகிருஷ்ணன் யோசனை

**சென்னை. நவ. 22 புறநகர் பகுதிகளில் வாழும் மக்களுக்கு உதவும் முறையில் இரவில் இளைஞர்கள் அணி அமைத்து ரோந்து வரலாம் என டி.ஜி.பி. ராதாகிருஷ்ணன் கூறினார்.**

படித்த வேலையில்லா இளைஞர்களுக்கு சுய வேலை வாய்ப்பு மூலம் உதவும் நம்பிக்கை நிலையத்தின் 5-ம் ஆண்டு விழா நேற்று மயிலாப்பூரிலுள்ளசீனிவாசா சாஸ்திரி ஹாலில் நடந்தது.

குறைந்தவிலையில் டீ, காபி விற்பனை செய்வது, மலேரியா மருந்து தெளிப்பது, நூல் நிலையப்பணி, குடியிருப்பு பகுதிகளில் இளைஞர்களின் இரவு நேர ரோந்து போன்ற பணிகளில் இந்தநிறுவனம் ஈடுபட்டு வருகிறது.

நேற்று இந்த நிறுவனத்தின் "வீடுகளுக்குச் சென்று பாலிதீன் பைகளில் காய்கறி விநியோகம் செய்வது" என்ற புதிய திட்டம் துவக்கி வைக்கப்பட்டது.

அமைச்சர்அண்டே இந்த விழாவில் கலந்துகொண்டு இந்த புதிய முயற்சியைத் துவக்கி வைத்தார்.

### காவல் துறையின் அற்புதப்பணி: ம. பொ. சி. பாராட்டு

விழாவில் பேசிய சிலம்புச் செல்வர் ம. பொ. சி. தமிழக காவல் துறையின்அற்புதப் பணிகளைப் பாராட்டினார்.

ஆங்கிலத்தில் இருக்கும் 'நம்பிக்கை சங்கம்' என்ற அந்தச் சங்கத்தின் பெயரை தமிழில் மாற்றுமாறு கேட்டுக் கொண்டார். சங்க நிர்வாகிகள் அதை ஏற்று 'நம்பிக்கை நிறுவனம்' என்று உடனே மாற்றுவதாக அறிவித்தனர்.

### வலம்புரிஜான்

விழாவில் சங்க உறுப்பினர்களுக்கு பரிசுகள் வழங்கிப் பேசிய தாய் ஆசிரியர் வலம்புரி ஜான் எம். எல். சி. தாய் பத்திரிகையின் சார்பில் அந்த சங்கத்தின் நூலகத்திற்கு 100 புத்தகங்கள் வாங்கித் தருவதாக அறிவித்தார்.

### ராதாகிருஷ்ணன்

விழாவில் கலந்து கொண்டு காவல்துறை இன்ஸ்பெக்டர் ஜெனரல் ராதாகிருஷ்ணன் பேசுகையில் கூறியதாவது;—

எதிர்காலத்தில் நன்மை பயக்கும் வகையில் தொழிலுக்கு வழி வகுக்கும் கல்வி திட்டம் இருக்கவேண்டும். நமது நாட்டில் இது வளர்ந்து வரும் வாய்ப்பு உள்ளது.

குற்றம் நடந்தால் அக்கம் பக்கம் இருப்பவர்களுக்குவிழிப்புணர்ச்சியை

8-ம் பத்தி பார்க்க

5-ம் பத்தித் தொடர்ச்சி

ஏற்படுத்த வேண்டும். இளைஞர்கள் துணிந்து ரோந்து பணி செய்ய வேண்டும்.

வெளியேவந்தால்என்ன நடக்குமோ என்ற அச்சம் கொள்ளாமல் தைரியமாக வெளியே வர வேண்டும்.

எப்போதும் அமைதியாக இருக்கும் தமிழகத்தில் அண்மையில் சம்பவம் நடந்தது. மக்கள் ஆதரவுடன் அந்த குற்றவாளிகளைப் பிடித்தோம்.

தமிழகத்தில் குற்றம் செய்தவர்கள் இதுவரை பிடிபடாமல் சென்றது இல்லை.

### இளைஞர்களின் ரோந்து பணி

இது போன்ற குற்றங்களை தடுப்பதற்கு மக்களது ஆதரவும் தேவை. மக்கள் விழிப்புணர்ச்சியோடு இருக்க வேண்டும்.

ஒதுக்குப்புறமான இடங்களில் வாழும் மக்களுக்கு உதவும் முறையில் இளைஞர்கள் அணி சேர்ந்து வரும் ரோந்து முறை அமையவேண்டும் என்று நான் விரும்புகிறேன். அதற்கு வேண்டிய உதவிகளைச் செய்ய நாங்கள் தயாராக உள்ளோம்.

ஒதுக்குப்புறமாக உள்ள இடத்தில் ஏதாவது நடந்தால் அக்கம்பக்கம் உள்ள மக்கள் உதவிக்கு வர விசில் சப்தம் செய்யலாம் அதன் மூலம்குற்றவாளிகளை பிடிக்க வாய்ப்பு இருக்கும் என்று ஒரு நல சங்கம் யோசனை தெரிவித்திருந்தது. இது பயனுள்ள யோசனைதான். இதன் மூலம் நல்ல பயன் கிடைக்கும்.

இவ்வாறு காவல்துறை டைரக்டர் ஜெனரல் ராதாகிருஷ்ணன் கூறினார்.

விழாவிற்கு நீதிபதி செங்கோட்டு வேலன் தலைமை வகித்தார்.

இந்திரா சென்னும் விழாவில் கலந்துகொண்டு பேசினார்.

முன்னதாக விழாவிற்கு வந்த அனைவரையும் அந்த சங்கத்தின் சட்ட ஆலோசகர் டி. ஆர். ரமேஷ் வரவேற்றார். அந்த சங்கத்தின் தலைவர் வி மோகன் ஆண்டு அறிக்கை வாசித்தார். செயலாளர் கே. நாகராஜ் நன்றி கூறினார்.

## சத்துணவுகூடம்: அமைச்சர் சவுந்திரராசன் திடீர் சோதனை

சென்னை, நவ. 22- செங்கல்பட்டு மாவட்டத்திலுள்ளசோத்துப்பாக்கம் என்ற ஊரிலுள்ள குழந்தைகள் நல மையத்தையும் பஞ்சாயத்து யூனியன் ஆரம்பப் பாடசாலையில் உள்ள சத்துணவு மையத்தினையும் சத்துணவுத்துறை அமைச்சர் சவுந்திரராசன் திடீர் சோதனையிட்டார்.

அந்த திடீர் சோதனையின்போது முறைகேடுகள் கண்டு பிடிக்கப்பட்டன. பாலர் பள்ளியிலுள்ள குழந்தைகள் நலக் காப்பாளரையும், ஆயாக்களையும், அதுபோல ஆரம்பப்பள்ளி சத்துணவு மைய அமைப்பாளர் மற்றும் ஆயாக்களையும் அமைச்சர் சவுந்திரராசன் வேலைநீக்கம் செய்ய உத்தரவிட்டார்.

44 நாடுகள் பங்கேற்கும்

# காமன்வெல்த் மாநாடு நாளை டெல்லியில் துவக்கம்

# 15 அதிபர்கள், 19 பிரதமர்கள் பங்கேற்கின்றனர்

புதுடெல்லி, நவ. 22— நாற்பத்து நான்கு நாடுகளின் தலைவர்கள் பங்கேற்கும் காமன் வெல்த் மாநாடு நாளை (புதன்கிழமை) புதுடெல்லியில் துவங்குகிறது.

இந்த மாநாட்டில் 15 நாடுகளின் அதிபர்கள் 19 நாடுகளின் பிரதமர்கள் உட்பட பல அரசியல் தலைவர்கள் பங்கேற்கின்றனர்.

இந்த மாநாடு புதன் கிழமை தொடங்கி ஒரு வார காலம்நடைபெறும்.

இந்த மாநாட்டில் பல்வேறு முக்கிய பிரச்சினைகள் குறித்து பலநாட்டுத் தலைவர்களும் மனம் விட்டு விவாதிக்கிறார்கள்.

வல்லரசுகள் மோதல் போக்கைக் கைவிட்டு அணு ஆயுதப்படைக் குறைப்புப் பிரச்சினைக்கு தீர்வு காண முன்வருவது பற்றி மாநாடு கோரிக்கை விடுக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

மேற்காசியாவில் நிலவும் பயங்கர சூழ்நிலை, தென்கிழக்கு ஆசிய நிலைமை, சர்வதேச நிதி நிறுவனங்களின் சீரமைப்பு போன்ற பிரச்னைகள் குறித்தும் மாநாடு தீவிரமாக பரிசீலிக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.



டாக்டர் பட்டம் பெற்ற முதல்வர் புரட்சித்தலைவருக்கு பாராட்டு தெரிவித்து தமிழக திரையுலக கலைஞர்கள் நடத்திய பிரம்மாண்டஊர்வலத்தை முதல்வர்பார்வையிட்டார்

★ பச்சிளம் சிறுவர்களின் பசியைப் போக்கியவர்

★ முதல்வரின் திட்டங்களுக்கு என்றும் துணை நிற்போம்

★ புரட்சித்தலைவரின் ஆட்சியில் தமிழகம் மேலும் மேலும் சிறப்புப் பெறுகிறது

டாக்டர் பட்டம் பெற்ற முதல்வர்

# புரட்சித்தலைவருக்கு தமிழக திரைஉலககலைஞர்கள்பாராட்டு

சென்னை, நவ. 22- டாக்டர் பட்டம் பெற்ற முதல்வர் புரட்சித்தலைவருக்கு சென்னை நேரு விளையாட்டு அரங்கில் நடந்த பாராட்டு விழாவில் தமிழக திரையுலக கலைஞர்கள் பாராட்டு தெரிவித்து பேசினர்.



டாக்டர் பட்டம் பெற்ற முதல்வர் புரட்சித்தலைவருக்கு சிவாஜி கணேசன் பொன்னாடை போர்த்தி வாழ்த்து தெரிவித்தார்.

சென்னை நேரு விளையாட்டு அரங்கில் டாக்டர் பட்டம் பெற்ற முதல்வருக்கு பாராட்டு விழா நடந்தது.

பச்சிளம் பாலகர்களின் பசி போக்கி, அவர்தம் முகங்களை மலரச் செய்த பார் போற்றும் பாரிவள்ளல், சத்துணவு திட்டம் தந்த தளநாயகர்புரட்சித் தலைவருக்கு டாக்டர் பட்டம் வழங்கியதற்காக தமிழ் திரையுலகம் நடத்திய பாராட்டு விழா நேற்றுமுன்தினம்நடந்தது. இந்தவிழாவில்கலந்துகொண்டுதிரையுலகத்தினர் புரட்சித் தலைவரைப் பாராட்டிப் பேசினர்.

## பாலசந்தர்

விழாவில் கலந்து கொண்டு பேசிய இயக்குனர் பாலசந்தர் பேசுகையில் எத்தனையோ பட்டங்கள் தன்னைத் தேடிவந்த போதும் உதறித்தள்ளிய புரட்சித் தலைவர் டாக்டர் பட்டத்தைப் பெற்று அவரைப் பாராட்ட எங்களுக்கு வாய்ப்பு தந்தமைக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்; எங்கள் குடும்பத் தலைவரை நாட்டுக்கு நாங்கள் அர்ப்பணம் செய்திருக்கிறோம், இன்று கலைஞர்கள் ஒருமுகமாக பாராட்டுகிறோம், மக்கள் திலகத்தால் நான் அறிமுகப் படுத்தப் பட்டவன் என்பதை இந்த நேரத்தில் தெரிவித்துக் கொள்கிறேன் என்று கூறினார்.

## தாசரி நாராயணராவ்

விழாவில் கலந்து கொண்டு இயக்குனர் தாசரி நாராயணராவ் பேசுகையில் புரட்சித் தலைவருக்கு கிடைத்த பட்டம் கலையுலகிற்கு பெருமை என்று கூறினார்.

## எஸ். எஸ். ஆர்.

விழாவில் கலந்து கொண்ட இலட்சியநடிகர் எஸ்,எஸ்.ஆர். புரட்சித் தலைவர் புகழ் பாடும் வாழ்த்து மடலை நடிகர் சங்கசார்பில் வாசித்து புரட்சித்தலைவரிடம் அளித்தார்.

## ஜெமினி கணேசன்

நடிகர் ஜெமினிகணேசன் விழாவில் கலந்துகொண்டு பாராட்டிப் பேசுகையில் டாக்டர்களுக்கெல்லாம் டாக்டராக புரட்சித் தலைவர் இருக்கிறார் புரட்சித் தலைவருக்கு டாக்டர் பட்டம் என்ன தரவேண்டும் என்று பேசினார்.

## விஜயகுமாரி

நடிகை விஜயகுமாரி பாராட்டிப் பேசுகையில் புரட்சித்தலைவரைப் பாராட்டிப் பேச எனக்கு எந்தத் தகுதியும் இல்லை புரட்சித் தலைவரின் சத்துணவு திட்டத்திற்கு என்னால் முடிந்த 50 ஆயிரம் நிதி தருகிறேன்என்று பேசினார்



டாக்டா பட்டம் பெற்ற முதல்வர் புரட்சித் தலைவருக்கு தென்னிந்திய நடிகர் சங்கம் சார்பில், அதன் தலைவர் எஸ். எஸ். ஆர். பாமாலை வழங்கியபோது எடுத்த படம்.



டாக்டர் பட்டம் பெற்ற முதல்வர் புரட்சித்தலைவருக்கு, இயக்குனர் பாக்கியரஜ், நடிகர்கள் கமலஹாசன், ரஜனிகாந்த் ஆகியோர் பெரும் ரோஜா மாலையை அணிவித்தனர்.



டாக்டர் பட்டம் பெற்ற முதல்வர் புரட்சித்தலைவருக்கு ஏ. வி. எம். நிறுவனத்தைச் சேர்ந்த எம். சரவணன் வெள்ளிக் கோப்பை ஒன்றை பரிசளித்தார்.

உள்ளத்தின் அடித்தளத்தில் இருந்து வாழ்த்துகிறேன்

# சத்துணவு திட்டம் வெற்றிபெற வேண்டும் - அண்ணன் பணி ஆல்போல் தழைக்க வேண்டும்

முதல்வர் புரட்சித்தலைவருக்கு சிவாஜி கணேசன் மனம் திறந்த பாராட்டு

சென்னை, நவ. 22- 'உள்ளத்தின் அடித்தளத்தில் இருந்து வாழ்த்துகிறேன், சத்துணவு திட்டம் வெற்றிபெற வேண்டும், அண்ணன் பணி ஆல்போல தழைக்க வேண்டும்'' என டாக்டர் பட்டம் பெற்ற முதல்வர் புரட்சித்தலைவரைப் பாராட்டிப் பேசுகையில் சிவாஜி கணேசன் கூறினார்.

விழாவில் கலந்து கொண்டு நடிகர் சிவாஜி கணேசன் பேசுகையில் கூறியதாவது:-

மாநிலத்தைஆளும்தமிழ் தலைவனுக்கு கிடைத்த பட்டத்தை தங்களுக்கு கிடைத்ததாக எண்ணி பேசியவர்களுக்கு அண்ணன் சார்பில் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன். தம்பியாகிய நான் தாய்ஸ்தானத்திலிருந்து அண்ணனுக்கு கிடைத்த பெருமை எனக்கு கிடைத்ததாக எண்ணிப்பெருமைப் படுகிறேன்.

நாங்கள் இருவரும் சகோதரர்கள் தான் இரண்டு வேறுபட்ட தொழிலில் நாங்கள்இருக்கலாம். அல்லது வேறுபட்ட இடங்களில் இருக்கலாம்.

ஆனால் அண்ணனுக்கு பெருமை என்றால் உள்ளம் உவந்து அண்ணனை பாராட்டுவதும், தம்பிக்கு அண்ணன் நல்வாழ்த்துக்கள். தெரிவிப்பதும்என்றதன்மையில் தான் நாங்கள் இருக்கிறோம்.

நாங்கள் இருவரும் ஒரே இடத்தில் வாழ்ந்து ஒரே இடத்தில் படுத்து ஒரே இலையில் ஒரே அன்னை கையில் உணவு உண்ட எங்களை அரசியல் வந்து பிரித்துவிட்டதே என்று நினைக்கும் போது வேதனையால் துடிக்கிறேன்.

உடன்பிறந்தவர்களுக்கு தான் ஆடாவிட்டாலும் தன் சதை ஆடும் என்பார்கள் அண்ணனின் உடன் பிறப்பு நான்.

அதனால்தான் டிசம்பர் மாதம் அண்ணனைப் பாராட்ட சபாநாயகர் என்னை அழைத்தபோது அனைவரையும் அழையுங்கள் என்றேன்.

கணிதம், மருத்துவம் என்று டாக்டர் பட்டம் தருவார்கள். ஆனால்இவருக்குமனிதாபிமானத்துக்கு டாக்டர் பட்டம் வழங்கியிருக்கிறார்கள். மனிதாபிமானத்தோடு எத்தனை பேர் அரசியலில் இருக்கிறார்கள்!

மகாத்மாகாந்தி, பண்டிதநேரு, பெருந்தலைவர் காமராஜர் ஆகியோரது கனவுகளை நிறைவேற்ற பாடுபடும் அன்னை இந்திரா ஆகியோரைப் போல் ஏழை மக்களுக்கு சத்துணவு போட்டு உங்கள் அன்பால் அவர்களை அரவணைத்தஇந்த மனிதாபிமானம் கொண்டவரை பாராட்ட நான் இந்த விழாவைப் பயன்படுத்திக் கொள்கிறேன் என்று கூறலாம்.

சத்துணவு திட்டம் வெற்றி பெற என்உள்ளத்தின் அடித்தளத்தில் இருந்து வாழ்த்தி உங்கள் எண்ணம், பெருமை, நிதானம், நாட்டு மக்களை அழைத்துச் செல்லும் லட்சியம் ஆகியவை ஆல்போல் தழைத்தோங்க நீங்கள் பல்லாண்டு வாழ என் அன்னையை வேண்டுகிறேன்.

இவ்வாறு சிவாஜி கணேசன் பேசினார்.

## கே. எஸ். கோபால கிருஷ்ணன்

இயக்குனர் கே. எஸ். கோபாலகிருஷ்ணன் விழாவில் கலந்து கொண்டு பேசுகையில் டாக்டர் பட்டம் புரட்சித் தலைவருக்குக் கொடுக்கப்பட்டதால் சிறப்பு பெற்றது என்று கூறினார்.

## கே. ஏ. தங்கவேலு

நேரு ஸ்டேடியம் கட்டியது முதல் இதுபோன்ற ஒரு கூட்டத்தைப் பார்த்ததில்லை கஷ்டமெங்கிருக்கிறதோ, துயர் எங்கிருக்கிறதோ அங்கு புரட்சித்தலைவர் தோன்றி துயர் தீர்ப்பார் என்று கே. ஏ. தங்கவேலு பாராட்டிப் பேசினார்.

## விஜயகுமார்

நடிகர் விஜயகுமார் விழாவில் கலந்துகொண்டு பேசுகையில்எத்தனையோ முதல்வர்கள் இருந்த போதும் புரட்சித் தலைவரைப்போல் வேறு யாரும் வரமுடியாது என்று கூறினார்.

## சிவகுமார்

பாராட்டு விழாவில் கலந்து கொண்டு நடிகர் சிவகுமார் பேசுகையில் புரட்சித்தலைவருக்கு டாக்டர் பட்டம் வழங்கியதால் மனிதாபிமானத்தை புரிந்து கொண்ட பல்கலைக் கழகம் என்ற பட்டத்தினை சென்னைப் பல்கலைக்கழகம் பெற்றது என்று கூறினார்.

## எஸ். பி. முத்துராமன்

இயக்குனர் எஸ். பி. முத்துராமன் கலந்து கொண்டு பேசுகையில் புரட்சித் தலைவரின் நற்செயலுக்கு கலையுலகம்

(5-ம் பக்கம் பார்க்க)

நெல்லை மனக்காவலம் பிள்ளை நகரில் நடைபெற்ற சததுணவு கூட அடிக்கல் நாட்டு விழாவில் ஆதரவற்ற தாய்மார்கட்கு சததுணவு திட்ட உயர்மட்டக்குழு உறுப்பினர் புரட்சிச் செல்வி ஜெயலலிதா தையல் எந்திரங்களை வழங்கினார்

∴ தமிழ் பல்கலைக்கழகம் அமைத்தவர்

∴ உலக தமிழ்சங்கம் அமைக்க நடவடிக்கை

# தமிழ்மொழி காக்க எந்த தியாகத்திற்கும் துணிந்த புரட்சிதலைவர்

## புரட்சிச் செல்வி ஜெயலலிதா முழக்கம்

**கிருஷ்ணகிரி, நவ. 22- தமிழ் மொழி காக்க எந்த தியாகத்தையும் செய்யத் துணிந்தவர் புரட்சித்தலைவர். அவருடைய ஆட்சியில்தான் தமிழ் பல்கலைக்கழகமும் உலக தமிழ்ச் சங்கமும் அமைந்திருக்கிறது என்று புரட்சிச் செல்வி ஜெயலலிதா குறிப்பிட்டார்.**

தர்மபுரி மாவட்டம் கிருஷ்ண கிரியில் காரனேஷன் மைதானத்தில் நடைபெற்ற பிரம்மாண்டமான கழகப் பொதுக் கூட்டத்தில் கழக கொள்கை பரப்புச் செயலாளர் புரட்சிச் செல்வி ஜெயலலிதா சிறப்புரை யாற்றினார்.

கூட்டத்திற்கு கே ஆர். சின்னராஜ் எம் எல் ஏ. தலைமை வகித்தார். டாக்டர் சமரசம் எம். எல். ஏ., டாக்டர் ராஜன், ராஜகோபால், சிவதாஸ் மற்றும் பலர் கலந்துகொண்டு பேசினர்

கடந்த 3 நாட்களாக உங்கள் மாவட்டத்தில் நான் சுற்றுப்பயணம் செய்து வருகிறேன், நான் எங்கே சென்றாலும் மக்கள் சிறப்பான வரவேற்பை-அன்பான வரவேற்பை நல்கினார்கள் என் நெஞ்சத்தை நெகிழ வைத்தார்கள்

அத்துடன் கழக உடன் பிறப்புகளும் மன்றமறவர்களும் ஒருங்கிணைந்து நமது கழகத்தின் தேர்தல் நிதியாக மொத்தம் ஒரு லட்சத்து 50 ஆயிரம் ரூபாய் என்னிடம் தந்திருக்கிறார்கள் அதற்காக அனைத்திந்திய அண்ணா தி மு கழகத்தின்சார்பில் இதயதெய்வம் புரட்சித் தலைவரின் சார்பில் கழக கண்மணிகளுக்கும் மன்ற மறவர்களுக்கும் என் இதயப் பூர்வமான நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

### கழகத்தவருக்கு நன்றி

என்னுடைய இந்த சுற்றுப் பயணம் சிறப்பாக அமைய வேண்டும் என்பதற்காக இரவும் பகலும் அயராது பாடுபட்ட பல்வேறு சிறப்பான ஏற்பாடுகளைச் செய்திருக்கும் மாவட்டச் செயலாளர் சின்னராஜ் அவர்களுக்கும் சட்டமன்ற உறுப்பினர் டாக்டர் சமரசம் அவர்களுக்கும் அவர்களுடன் ஒத்துழைத்த அனைத்து கழக கண்மணிகளுக்கும் மன்ற மறவர்களுக்கும் என் உள்ளங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்

தர்மபுரி மாவட்டம் சேரமன்னர்களின் ஆட்சியில் இருந்த பூமி.

தகடூர் நகரைத் தலைநகராகக் கொண்டு சேரமன்னர்கள் இந்த மண்ணை ஆண்டு வந்தனர்

அந்த சேரமன்னர்களில் சிறப்பு பெற்றவர் மன்னர் அதியமான். அவர் அவ்வையார் காலத்து மன்னர், தமிழ்வாழ தமிழ் வளர பாடுபட்டவர் மன்னர் அதியமான்.

அந்த அதியமான் ஓர் நாள் வேட்டைக்குச் செல்கிறார் அவர் வேட்டைக்குச் சென்ற இடம் பெரியமலை என்கிறார்கள். காவேரிப்பட்டினம் தொகுதியில் இருக்கிறது. அந்த மலையில் அவருக்கு கிடைத்தற்கரிய ஒரு கனி கிடைக்கிறது.

அந்தக் கனி நெல்லிக் கனிதான். ஆனால் 100 ஆண்டுகளுக்கு ஒருமுறை காய்த்து கனிகின்ற கனி. குறிஞ்சி மலர் 12 ஆண்டுகட்கு ஒருமுறை மலரும் இந்த குறிஞ்சி மண்ணில் 100 ஆண்டுகளுக்கு ஒருமுறைதான் அந்த நெல்லிக் கனி காய்க்கும்

அந்த நெல்லிக் கனிக்கு ஒரு சிறப்பு உண்டு. அந்தக் கனியை அருந்துபவர்கள். 100 ஆண்டுகள் புகழோடும் வளமோடும் வாழ்வார்கள் என்று அன்று கூறினார்கள்.

அந்த கனியை அதியமான் அரண்மனைக்கு கொண்டுவருகிறார். சபை முன்வைக்கிறார் இருப்பதோ ஒரே ஒரு நெல்லிக்கனி. இந்தக் கனியினை யாருக்கு கொடுக்கலாம் என்று கேட்கிறார்

### சபையோர் தீர்ப்பு

அந்தக் கனியை மன்னன் அதியமானே அருந்த வேண்டும். இன்னும் 100 ஆண்டுகள் வாழ வேண்டும் ஆட்சிசெய்யவேண்டும் என்று சபையோர் கூறுகிறார்கள்.

அதியமான் அப்போது கூறுகிறார், 'மொழி காக்கப் பட்டால் நாடு காக்கப்படும் தமிழ் மொழியைக் காப்பவர்கள் புலவர் பெருமக்கள் இன்றைக்கு தமிழ் காத்து தமிழ் மொழியை உலகமெல்லாம் பரவச் செய்பவர் தமிழ் மூதாட்டி அவ்வை. எனவே இந்த நெல்லிக் கனியை தமிழ் மூதாட்டி அவ்வைக்கே அளிக்கிறேன்' என்று அதியமான் அளிக்கிறார்

இப்படி தமிழ்காக்க எந்தத் தியாகமும் செய்யத் தயாராக இருந்தவர் மன்னன் அதியமான்

### வரவேற்பு

கடந்த 3 நாட்களாக சுற்றுப் பயணம் செய்தேன். சென்ற இடமெல்லாம் மக்கள் எனக்கு சிறப்பான வரவேற்பு அளித்தார்கள்.

அதுமட்டுமல்ல. கழகத் தோழர்களும் மன்ற மறவர்களும் எனக்கு நெல்லிக்கனி தந்தார்கள் காவேரிப்பட்டினம் கழகத் தோழர்களும், தர்மபுரி தொகுதி சட்டமன்ற உறுப்பினரும், அரூர் தொகுதி எம்ஜிஆர் மன்றமறவர்களும்எனக்கு நெல்லிக்கனியினை பரிசளித்தார்கள். அவர்கள் எனக்கு அளித்தாலும் இதனை இதய தெய்வம் புரட்சித்தலைவர் அவர்களுக்கு அளித்ததாகவே கருதுகிறேன்

அன்றைக்கு தமிழ் வாழ எந்தத் தியாகத்தையும் செய்யத்தயாராக இருந்தவர் சேரமன்னன் அதியமான்.

### தமிழ்ப் பல்கலை கழகம்

இன்றைக்குத் தமிழ் வாழ எந்தத் தியாகத்தையும் செய்யத் துணிந்தவர் நமது இதயதெய்வம் புரட்சித்தலைவர் அவர்கள்.

(பலத்த கைதட்டல்)

கடந்த 120 ஆண்டுகளாக தமிழகத்தில் அமைந்தது 4 பல்கலைக் கழகங்கள் தான். இன்றைக்கு புரட்சித்தலைவர் ஆட்சியில் நான்கே ஆண்டுகளில் 5 பல்கலைக் கழகங்கள் அமைந்திருக்கின்றன அவற்றில் தமிழ்ப்பல்கலைக் கழகமும் ஒன்றாகும்.

சங்க காலத்தில் முதற் சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என்று 3சங்கங்கள் இருந்ததாக இலக்கியங்கள் கூறுகின்றன அந்த சங்கங்களின் மறைவிற்குப் பின்னால் உலகமெலாம் தமிழ் பரவ ஒரு சங்கம் காணவேண்டும் என்ற எண்ணம் எவருக்கும் தோன்றியதில்லை.

''நான் தமிழன்; நான் தான் தமிழன்'' என்று சந்தேகத்தோடு இன்றைக்குக் கூறிக் கொண்டிருப்பவர் கருணாநிதி அந்தகருணாநிதிக்கு ஒரு தமிழ் சங்கம் காணவேண்டும் என்ற எண்ணம் கூட ஏற்பட்டதில்லை.

ஆனால் புரட்சித் தலைவர் அவர்கள்உலகத்தமிழ் சங்கம் காண்கிறார். சங்கம் வளர்த்த மதுரை மாநகரில் உலகத் தமிழ் சங்கம் அமைய இருக்கிறது. உலகத்தமிழ் மாநாட்டினை புரட்சித் தலைவர் எவ்வளவு சீரோடும், சிறப்போடும் நடத்தினார் என்பதை அறிவீர்கள்

தமிழ் வாழ தமிழர்கள் தலைநிமிர்ந்து நின்றிட தமிழினத்தைக் காத்திட தன்னையே அர்ப்பணித்துக் கொண்டிருக்கின்ற புரட்சித் தலைவருக்கு தர்மபுரி மாவட்ட மக்கள் ஒன்றல்ல, இரண்டல்ல, மூன்று நெல்லிக் கனிகளை-தங்க நெல்லிக் கனிகளை அளித்திருக்கிறார்கள் என்று கருதுகிறேன்.

(கைதட்டல்-ஆரவாரம்)

தர்மபுரி மாவட்டத்திற்கு ஒரு அமைச்சர் இல்லையே என்று குறைபட்டுக் கொண்டார்கள்

தர்மத்தின் தளநாயகன் புரட்சித்தலைவர். அந்த தர்மத்தின் தளநாயகன் தான் தர்மபுரிக்கும் அமைச்சர். முதலமைச்சரையே நீங்கள் உங்கள் மாவட்ட அமைச்சராகப் பெற்றிருக்கிறீர்கள்.

எனவே எந்த மாவட்டத்திற்கும் இல்லாத சிறப்பு தர்மபுரி மாவட்டத்திற்கு இருக்கிறது என்றே கருதுகிறேன்.

(பலத்த கைதட்டல்)

இவ்வாறு புரட்சிச் செல்வி ஜெயலலிதா கூறினார்.

# சம்பா நெல் கொள்முதல்: அரசின் ஊக்கத் தொகை ஜனவரி 31-வரை நீடிப்பு

## நிதியமைச்சர் டாக்டர் நாவலர் அறிவிப்பு

**தஞ்சாவூர். நவ. 22- சம்பா நெல் கொள்முதலுக்கும் அரசின் ஊக்கத் தொகை குவிண்டாலுக்கு 35 ரூபாய் 1984 ஜனவரி 31-ந் தேதி வரை தொடர்ந்து அளிக்கப்படும் என நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.**

நிதிமற்றும் உணவுத் துறை அமைச்சர் டாக்டர் நாவலர், தஞ்சாவூரில், தஞ்சைகலெக்டர் ஆர். சத்பதி, திருச்சி, கலெக்டர் பி. நடேசன் புதுக்கோட்டை கலெக்டர் கற்பூரசுந்தரபாண்டியன், தென்னாற்காடு மாவட்ட வருவாய்த் துறை அதிகாரிபி.மாரிமுத்து ஆகியோருடன் ஆலோசனை நடத்தினார்

உணவுத்துறை செயலாளர் என்.கிருஷ்ணமூர்த்தி, தமிழ்நாடு சிவில் சப்ளை கார்ப்பரேஷன் தலைவர், பி.பி கிருஷ்ணசாமி ஆகியோரும் ஆலோசனையில் பங்கேற்றனர்.

### நெல்லுக்கு கூடுதல் விலை

பிறகு நிருபர்களிடம் பேசுகையில் நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறியதாவது:-

மாநிலத்தின் சில பகுதிகளில் தற்போது அரசே மொத்த நெல் கொள்முதல் பணிகளை மேற்கொண்டுள்ளது,

இந்த ஏற்பாடு சம்பா நெல் கொள்முதலுக்கும் நீடிக்கும்.

1984, ஜனவரி 31-ந் தேதி வரை இந்த முறையை நீடிக்க அரசு முடிவு செய்துள்ளது.

வறட்சி காரணமாக, விவசாயிகட்கு கொள்முதல் விலையில் கூடுதலாக குவிண்டாலுக்கு, ரூ 35 கொடுக்கப்பட்டு வருகிறது

இதனால் ஒரு குவிண்டால் நெல்விலை ரூ 132- மற்றும் ஊக்கத்தொகை ரூ. 35-ம் சேர்த்து மொத்தம் குவிண்டாலுக்கு ரூ. 167 கிடைக்கிறது.

இவ்வாறு விவசாயிகளுக்குக் கூடுதல் ஊக்கத் தொகை அளிப்பது 1984- ஜனவரி 31-ந்தேதி வரை நீடிக்கவும் அரசு முடிவு செய்துள்ளது.

இவ்வாறுநிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

### அம்பத்தூர் கழகப் பொதுக் கூட்டம்

சென்னை, நவ. 22— அம்பத்தூர் ஓரகடத்திலுள்ள காந்தி நகரில் இன்று மாலை 6 மணிக்கு கழகப் பொதுக் கூட்டம் நடக்கிறது.

வி. அரிகிருஷ்ணன் தலைமையிலும், எம். தாமோதரன் முன்னிலையிலும், ஓ. என். எத்திராசன், எம். ராமகிருஷ்ணன் வரவேற்பிலும் நடக்கும் இந்தக் கூட்டத்தில் காடுவெட்டி கண்ணப்பன் எம். எல். சி., ஜெ. சி. டி. பிரபாகரன் எம். எல். ஏ., ஆர்.எஸ். மணி, சி வி. விஜயன், எஸ். ராமன் மற்றும் பலர் பேசுகின்றனர் ஆர். பரசுராமன் நன்றி கூறுகிறார்.

காவேரிப்பட்டினத்தில் நடந்த கழக நிகழ்ச்சியில் கொள்கை பரப்புச் செயலாளர் புரட்சிச் செல்வி ஜெயலலிதாவுக்கு நகரக்கழக செயலாளர் பி முனுசாமி வாழ்த்து மடல் அளித்தார்.

# கலைஞர்கள் பாராட்டு...

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

என்றும் துணை நிற்கும் என்று குறிப்பிட்டார்.

### முக்தா சீனிவாசன்

படத் தயாரிப்பாளரும், இயக்குனருமான முக்தா வி. சீனிவாசன் பேசுகையில் புரட்சித்தலைவரின் தலைமையில் தமிழகம் சிறப்புபெறுவதோடு திரையுலகத்தினரும் பாதுகாப்புடன் வாழ்கின்றனர் என்று குறிப்பிட்டார்.

### டி. ராஜேந்தர்

இயக்குனர் டி. ராஜேந்தர் பேசுகையில் புரட்சித் தலைவரின் நான் ஏன் பிறந்தேன் என்றகட்டுரை தொடரை படித்தபின்புதான் விரக்தியின் விளிம்பிலிருந்த நான் நாமும் வாழ வேண்டும் என்ற எண்ணத்தைப் பெற்றேன் என்று கூறினார்.

### ரஜினிகாந்த்

நடிகர் ரஜினிகாந்த் இந்த விழாவில் கலந்து கொண்டு பேசுகையில் எப்படி இருக்கவேண்டும் என்பதற்கும், எதையும் சாதிக்க முடியும் என்பதற்கும் புரட்சித்தலைவர் உதாரணமாக விளங்குகிறார். நடிகர்களுக்கு பெண் தர மறுத்த காலத்தை மாற்றி இன்று நாட்டையே மக்கள் தருமளவு புரட்சித் தலைவர் உருவாக்கியிருக்கிறார். அவர் வாழ்ந்த காலத்தில் நாமும் வாழ்வதே சிறப்பு என்று குறிப்பிட்டார்.

### கமலஹாசன்

விழாவில் நடிகர் கமலஹாசன் கலந்து கொண்டு வாழ்த்து மடல் ஒன்றை வாசித்து புரட்சித் தலைவரிடம்வழங்கினார்.

### பாரதி ராஜா

விழாவிற்கு தலைமையேற்று இயக்குனர் பாரதிராஜா பேசுகையில் மக்களை படிக்க முயலும் நாங்கள், மக்களை படித்து டாக்டர் பட்டம் பெற்ற புரட்சித் தலைவருக்கு பாராட்டு விழா நடத்துகிறோம். இங்கு கூடியிருக்கும் கூட்டம் ஒரு தனிமனிதனுக்கு உள்ள மகிமையை நிருபிக்கும் கூட்டம் என்று குறிப்பிட்டார்.

### பாக்கியராஜ்

விழாவில் கலந்து கொண்டு நடிகர் பாக்கியராஜ் பேசுகையில் கலைஞர்களுக்கு மக்கள் தான் சொத்து என்று குறிப்பிட்டார்

விழாவில் கே. ஆர். விஜயா, ஸ்ரீதேவி, டி. ராமானுஜம், மோகன், பிரபு' சரவணன், ராதா, விஜய்காந்த், ரேவதி, வினுசக்ரவர்த்தி, நளினி, தியாகராசன், ராஜ சுலோசனா, ஜெய்சங்கர், ஆகியோரும் பாராட்டிப் பேசினர்.

### ஜெ. பாலன் உடல்நலக் குறைவு

சென்னை, நவ. 22- சென்னை திருவல்லிக்கேணி தொகுதி செயலாளர் ஜெ.பாலன் உடல் நலக் குறைவால் ஈ. வெ ரா. பெரியார் சாலையில் உள்ள தனியார் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளார்



## தமிழ்நாடு ஆதிதிராவிடர் வீட்டுவசதி மற்றும் வளர்ச்சிக் கழகம்

எண். 1. வில்லியம்ஸ் லே அவுட், விழுப்புரம் 605602,

### சீட் டெண்டர் நோட்டீஸ்

தலைவர் மற்றும் மேலாண்மை இயக்குனர் ''தாட்கோ'' விழுப்புரம் அவர்களுக்காக நிர்வாகப்பொறியாளர். தாட்கோ, தென்னாற்காடுகோட்டம், விழுப்புரம் அவர்களால் கீழ்கண்ட வேலைக்கான மூடி முத்திரையிடப்பட்ட ஒப்பந்தப்புள்ளிகள் அதன் எதிரே குறிப்பிட்ட வகுப்பிற்குரிய பதிவு பெற்ற, தாட்கோ, பொதுப்பணித் துறை நெடுஞ்சாலை மற்றும் கிராமப்பணித்துறை ஒப்பந்தக்காரர்களிடமிருந்து 23-12-83 அன்று மாலை 3-00 மணி வரை அவரது அலுவலகத்தில் பெற்றுக்கொள்ளப்பட்டு அன்று மாலை 3-30 மணி அளவில் ஒப்பந்தப்புள்ளி கொடுத்துள்ள ஒப்பந்தக்காரர்கள் முன்னிலையில் திறக்கப்படும்.

வேலையின் பெயருக்கு குறிப்பிடப்பட்ட தகுதியுடைய ஒப்பந்தக்காரர்களுக்கு மட்டுமின்றி அடுத்த வகுப்பில் பதிவு செய்துள்ள ஒப்பந்தக்காரர்களுக்கும் ஒப்பந்தப்புள்ளிகள் வழங்கப்படும் எனினும் அவர்களுடைய ஒப்பந்தப்புள்ளிகள் பரிசிலனை செய்யப்பட்டு ஒப்புக் கொள்ளக்கூடிய நிலையில் இருந்தால் அவர்கள் அந்த வேலையைச் செய்ய தகுதியுள்ள வகுப்பில் பதிவு செய்த பின்னரே அவர்களது ஒப்பந்தப் புள்ளிகள் ஏற்றுக் கொள்ளப்படும். குறித்த காலத்திற்குள் அந்த ஒப்பந்தக்காரர் தகுதியுள்ள வகுப்பில் பதிவு செய்யத் தவறினால் அவரது ஒப்பந்தப்புள்ளிகள் நிராகரிக்கப்பட்டு பிணைப்புத் தொகையும் பறிமுதல் செய்யப்படும்.

தேர்ந்தெடுக்கப்பட்ட ஒப்பந்தக்காரரின் ஒப்பந்தம் ஒப்புக்கொள்ளப்படுமுன் ''தாட்கோவிலும்'' ஒப்பந்தக் காரராக உரிய வகுப்பில்பதிவு செய்து கொள்ளவேண்டும்.

| | |
|---|---|
| வேலையின் பெயர்: | தென்னாற்காடு மாவட்டம் சேத்தியா தோப்பில் 192 மாணவர்கள் தங்கும் விடுதி கட்டும் வேலை |
| ஒப்பந்தக்காரரின் தகுதி: | I-ம் வகுப்பு |
| முன் வைப்புத் தொகை: | ரூ. 15000- |
| ஒப்பந்தப் புள்ளியின் விலை: | ரூ. 75.00 விற்பனை வரி ரூ. 3 00 சர்சார்ஜ் ரூ. 0.15 ஆக மொத்தம் ரூ 78.15 |
| ஒப்பந்தப் படிவம்: | எல்.எஸ். மொத்த தொகை |
| ஒப்பந்தக் காலம்: | 9 மாதங்கள் |
| ஒப்பந்தப்புள்ளியின் விலைக்கான பணம் செலுத்தும் முறை: | ரூ. 75.00 நிர்வாகப் பொறியாளர், தாட்கோ, விழுப்புரம் சேமிப்புக் கணக்கு எண். C & I 18ல் அரசு வங்கி விழுப்புரத்தில் செலுத்தவேண்டும். ரூ. 3 15 கருவூலத்தில் ''040'' விற்பனை வரி என்ற தலைப்பில் பணம் செலுத்தவேண்டும். |

ஒப்பந்தப் புள்ளிகளுக்கான பத்திரங்களை நிர்வாகப் பொறியாளர், தாட்கோ, தென்னாற்காடு கோட்டம், விழுப்புரம் அவர்களது அலுவலகத்தில் 16 12 83 முதல் 22 12 83 மாலை 5 00 மணி வரை பெற்றுக் கொள்ளலாம்.

எந்த அல்லது எல்லா ஒப்பந்தப் புள்ளிகளையும் காரணம் ஏதும் குறிப்பிடாமல் நிராகரிக்கும் உரிமையை மேலாண்மை இயக்குனரும், நிர்வாகப் பொறியாளரும் பெற்றுள்ளனர்.

நிர்வாகப் பொறியாளர்

DIPR: 66537-83 19 EP

PUBLISHED BY K RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D.M.K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34, NELSON MANICKAM ROAD MADRAS-600029
EDITORE, PARASURAMAN.


ஏற்காட்டில் கழக கொள்கை பரப்புச் செயலாளர் புரட்சிச்செல்வி ஜெயலலிதா பங்கேற்ற பிரமாண்டமான கழக கூட்டத்தில் கூடியிருந்த பல்லாயிரக்கணக்கான பெண்கள் கூட்டத்தில் ஒரு பகுதி.

# மகளிர் மத்தியில் ஏற்பட்டுள்ள மகத்தான அரசியல் எழுச்சி

**தென் மாவட்டங்களில் சுற்றுப் பயணம் செய்த கழக கொள்கை பரப்புச் செயலாளர் புரட்சிச் செல்வி ஜெயலலிதாவுக்கு வழியெங்கும் உற்சாக வரவேற்பு அளிக்கப்பட்டது. கொள்கை பரப்புச் செயலாளர் புரட்சிச்செல்வி பங்கேற்ற கூட்டங்களில் எல்லாம் மகளிர் கூட்டம் பெருந்திரளாக வந்திருந்தது குறிப்பிடத்தக்கது ஆகும்.**

புதுக்கோட்டை மாவட்டம் இலுப்பூரில் இரண்டாம் நாள் நிகழ்ச்சி!

இலுப்பூர் ஆயிஷா அம்மாள் மகப்பேறு மருத்துவ மனை அருகே கழகத்தின் கொடியை கொள்கை பரப்புச் செயலாளர் புரட்சிச் செல்வி ஜெயலலிதா ஏற்றி வைத்தார்.

புரட்சிச்செல்வியை வரவேற்க இலுப்பூரே திரண்டிருந்தது!

பகல் 2 மணியிலிருந்து கொளுத்தும் வெய்யிலில் மக்கள் கூட்டம் கூடத் தொடங்கியது.

தாய்மார்கள் தங்களின் கைக்குழந்தைகளுடன் கூடியிருந்தனர்.

கூட்டத்தில் ஆண்களுக்கு சரிசமமாக பெண்கள்!

இஸ்லாமிய சகோதரிகள் தங்கள் வீடுகளில்கூட 'பர்தா' அணிந்து தான் காணப்படுவார்கள்.

ஆனால் இலுப்பூரில் கூடி இருந்த கூட்டத்தில், அதுவும் பெண்கள் கூட்டத்தில் பெரும் அளவு இஸ்லாமிய சகோதரிகள் தான்!

## அன்றலர்ந்த தாமரைபோல்

தாய்க்குலத்தின் தலைவியாக, புரட்சித்தலைவரின் மாணவியாக வருகை தந்திருக்கும் புரட்சிச் செல்வி ஜெயலலிதாவை பார்த்தவுடன் அவர்கள் முகங்களெல்லாம் அன்றலர்ந்த தாமரை போல பிரகாசித்தது

இலுப்பூர் நகரம் கழகசட்டமன்ற உறுப்பினர் குளத்தூர் டி மாரிமுத்து தொகுதிக்குள் அடங்கியதாகும்.

இலுப்பூரில் ஏதோ ஒரு திருவிழாவுக்கு கூட்டம் கூடுவது போல் மக்கள் சாரை சாரையாக வரத் தொடங்கினர்.

இலுப்பூரில் கழகக் கொடியை ஏற்றிவைத்து மேடைக்கு செல்லும் வழியெங்கும் சின்னஞ்சிறு சிறுமிகள் வண்ணத்துப் பூச்சி போல்சுறுசுறுப்பாக தாமரை இதழ்களையும் ரோஜா மலர்களையும் தூவி புரட்சிச் செல்வி ஜெயலலிதாவை வரவேற்றனர்.

இலுப்பூரில் கழகக் கொடியை ஏற்றிவைத்து புதுக்கோட்டை மாவட்டத்திற்கு புரட்சித்தலைவர் அரசு செய்துள்ள திட்டங்களை - நன்மைகளை புரட்சிச்செல்வி ஜெயலலிதா எடுத்துரைத்தார்.

கூட்டத்தினர் கைதட்டல்கள், ஆரவாரத்துடன் அவைகளை அங்கீகரித்தனர்.

பின்னர் அங்கிருந்து மேற்கு முகவைமாவட்டத்தில் சுற்றுப்பயணம் செய்வதற்காக மதுரை மாநகர் சென்றடைந்தார்

மதுரை நகரில் தங்குவது தான் என்றாலும் அங்கு நூற்றுக் கணக்கான கழகத் தோழர்களும், மகளிரும்தொழிற் சங்கத்தினரும், கழக கொள்கை பரப்புச் செயலாளர் புரட்சிச் செல்வி ஜெயலலிதாவை வரவேற்று மாலைகள் அணிவித்தனர்.

மேற்கு முகவை மாவட்டத்தில் புரட்சிச்செல்வி ஜெயலலிதா முதன் முறையாக சுற்றுப்பயணத்தை மேற்கொண்டிருக்கிறார்.

## திக்குமுக்காடிய மக்கட்கூட்டம்

முதன் முதலில்காரியாப்பட்டியில் பேரறிஞர் அண்ணாவின் திருவுருவம் பொறித்த கழகக் கொடியினை ஏற்றி வைத்தார்.

காரியாப்பட்டி கூட்டம் ஜனசமுத்திரத்தால் திக்குமுக்காடியது. ஒருவர் மூச்சுவிட்டால்அடுத்தவர் தலையில் தான் விட வேண்டும். அத்தகைய கூட்டம் சிலர் மயக்கமடைய வேண்டிய நிலை கூட ஏற்பட்டது.

காரியாப்பட்டி, தமிழகத்திலேயே தனி சிறப்பு வாய்ந்த இடம்.

தமிழகத்தின் முதல்வர், பேரறிஞர் அண்ணாவின் இதயக்கனி, இதயதெய்வம் புரட்சித்தலைவர் போட்டியிட்ட தொகுதியில் அடங்கிய ஊராகும் (இதைவிட வேறு எது அந்த தொகுதிக்கு சிறப்பு சேர்க்க முடியும்?

புரட்சித்தலைவர் தான் போட்டியிடுவதற்கு ஒரு இடத்தை தேர்ந்தெடுத்தால் ஆங்கே ஏதேனும்ஓர் உள்ளார்ந்த காரணம் இருக்கும்.

கருணாநிதி முதலமைச்சராக இருந்த போது தமிழகம் ஊழல்பேர் வழிகளால் சூறையாடப்பட்ட போது வரலாறு காணாதவறட்சி ஏற்பட்டது.

அழுகின்ற குழந்தை எதற்காக அழுகிறது என்பது சில தாய்மார்களுக்கு தெரியாது. ஆனால் மக்களின் இதய துடிப்பை துல்லியமாக அறியும் அபூர்வ சக்தி படைத்த புரட்சித்தலைவர் கலையுலகில் தான் உழைத்து சம்பாதித்த பணத்தால் மேற்கு முகவை மாவட்டத்தில் கஞ்சி தொட்டிகளை திறந்து பசித்த மக்களை பசியாற செய்த இடத்தில் ஒன்றுகாரியாப்பட்டி.

## மக்களின் எழுச்சி

அவர் போட்டியிட்டு முதல்வரான பின் அந்தப் பகுதிக்கு வாட்டம் போக்கும் வளமான திட்டங்களைத் தீட்டியது ஏராளம், ஏராளம். அவைகளையெல்லாம் மக்களின் எழுச்சியினிடையே புரட்சிச் செல்விஎடுத்துரைம்பினார்

மதுரையிலிருந்து காரியாப்பட்டிக்கு வரும் வழியெங்கும் அவனியாபுரம், திருப்பரங்குன்றம் கள்ளிக்குடி உசிலம்பட்டி, கல்குறிச்சி மல்லங்கிணறு போன்ற ஊர்களிளெல்லாம் மக்கள் திரண்டிருந்து வாழ்த்து முழக்கம் எழுப்பினார்கள்.

காரியாப்பட்டியில் கழக கொடியை ஏற்றி வைத்து விட்டு மருளுத்து, துலுக்கப்பட்டி, நடுவூர்பட்டி, வெங்கடாசலபுரம் வழியாக சாத்தூர் பொதுக் கூட்டத்திற்கு புரட்சிச் செல்வி ஜெயலலிதா வந்து சேர்ந்தார்

சாத்தூர் நகரம் இந்தியாவிலேயே குடிசைத் தொழிலுக்கு பெயர் பெற்ற நகரம்.

## வரவேற்பு வளைவுகள்

சாத்தூரில்தான் தீப் பெட்டி தொழில் வளமோடு நடைபெறுகிறது சாத்தூர் நகர்முழுவதும் சிறப்பான மின் விளக்கு தோரணங்களும் வரவேற்பு வளைவுகளும்கட்டப்பட்டிருந்தன

சாத்தூரில் நடைபெறுவது கழகப் பொதுக் கூட்டமா அல்லது தென் மாவட்டங்களின் கழக மாநாடா என்று வியக்க வைக்கும் மக்கள் கூட்டம்.

**ஜி. கண்ணன்**

ஒரே வார்த்தை...எங்கு நோக்கினும் மக்கள்... மக்கள்...! அதற்குமேல் சொல்வதற்கு வார்த்தை எழவில்லை!

சாத்தூர் பொதுக் கூட்டத்தை முடித்துகொண்டு சிவகாசிக்குபயணமானார் புரட்சிச் செல்வி ஜெயலலிதா!

மேட்டமலை, சின்ன காடன்பட்டி, பேருலூரன் பட்டி, மீனம்பட்டி, வழியாக சிவகாசி வந்தடைந்தார்.

சிவகாசி நகரம் உலகிலேயே வாணவெடிகளுக்கு பெயர் பெற்ற இடம்!

ஆட்டையாம்பட்டியிலிருந்து அணுகுண்டு தயாரிக்கும் அமெரிக்கா வரை சிவகாசி என்றால் பட்டாசுதான் நினைவுக்கு வரும்.

## விண்ணைப் பிளந்த வாணவெடிகள்

அந்த சிவகாசியில் மக்களின் இதயவேந்தன் புரட்சித்தலைவரின் மாணவி புரட்சிச்செல்விவருகிறார் பேசுகிறார் என்றால் கேட்கவா வேண்டும்?

மேளதாளங்கள், பாண்டு வாத்தியங்களுக்கு அங்கே பஞ்சமே இல்லை. அரை மணி நேரம் பட்டாசு வெடிச் சத்தம் விண்ணை பிளந்தது.

வானத்தில் சிவகாசி பட்டாசுகள் நடத்திய வண்ண வண்ண நர்த்தனங்கள் ஆயிரமாயிரம்!

சாத்தூரை மிஞ்சியது சிவகாசி!

அலங்காரத்தில் மட்டுமல்ல, வாணவேடிக்கையில் மட்டுமல்ல, மக்கள் கூட்டத்தாலும் அப்படித் தான்!

சிவகாசி இனி ஒரு கூட்டத்தை எப்போது காணும்?

இதற்கு பதில் சொல்வது புரட்சித்தலைவரின் வருகை ஒன்றால் மட்டுமே முடியும்!

சாத்தூர் கூட்டத்திலும் சிவகாசி கூட்டத்திலும் புரட்சிச் செல்வி ஜெயலலிதா பேசும்போது விருதுநகரில் மறுநாள் கூட்டத்திற்கு அமைக்கப் பட்டிருந்த மேடைக்கு தி.மு.க. குண்டர்கள் தீ வைத்தனர்.

நீரும்நெருப்பும் அழிக்க முடியாத அண்ணாவின் கொள்கைகளை- புரட்சித் தலைவரின் வரலாற்று சாதனைகளைக் கூறுவதற்காக புரட்சிச்செல்வி பேச இருந்த மேடைக்குத் தீ வைத்து விட்டால் பேசாமல் திரும்பி விடுவார் என்று வழக்கம்போலவே திமுகவினர் மனக்கணக்கு போட்டனர்.

"இருப்பது ஓர் உயிர்! அது போவதும் ஓர் முறை தான்" என்று கூறிய அண்ணாவின் தம்பி — இதயக்கனி புரட்சித் தலைவரின் மாணவி புரட்சிச்செல்வி இதற்கெல்லாம் பயந்து போய் விடுவார் என்று கருதி இருப்பார்கள் போலும்!

"உச்சி மீது வானிடிந்து வீழுகின்றபோதிலும் அச்சமில்லை; அச்சமில்லை" என்று பாடிய பாரதிகனவு கண்ட புரட்சிப்பெண்- புதுமைப்பெண் புரட்சிச் செல்விஜெயலலிதாஎன்பது அவர்களுக்குப் புரியவில்லை.

## தோட்டாக்கள் என்ன செய்யும்?

புரட்சிச்செல்வி ஜெயலலிதா ஆணித்தரமாக, "மேடைதான் வேண்டும் என்பதில்லை மாட்டு வண்டியில் கூட நின்று பேசுவேன் புரட்சித்தலைவரின் குரலை அடக்கும் சக்தி துப்பாக்கி தோட்டாக்களுக்கே இல்லை. நிச்சயம் கருணாநிதிகட்சி குண்டர்களால் அடக்க முடியாது" என்று வீராவேசமாகக் கூறினார்.

அடுத்த நாள்...

அருப்புக்கோட்டையில் தேவாங்கர் மேல் நிலைப் பள்ளி திடலில் கூட்டம்.

வறட்சி பகுதியில் திடீரென்று காவிரி திசை திரும்பி நுழைந்தது போல் அருப்புக்கோட்டையே மக்கள் நதி தீரம் போல் காட்சி தந்தது!

கொள்கை பரப்புச் செயலாளர் மேடைக்கு வந்ததும் காவிரியோடு கங்கையும் வந்து சேர்ந்தாற்போல்மேலும் மக்கள் நதி அதிகரித்தது.

கூட்டம் எழுந்தது ஆனால்அமர முடியாமல்; தத்தளித்தது

இந்த நெரிசலில் சிலர் மயக்கமுற்றனர். கூட்டத்தினர் சிரமப்படுது கண்ட புரட்சிச் செல்வி சிறிது நேரத்திலேயே பொது மக்கள் நலன் கருதி தனது உரையை முடித்துக் கொண்டு மீண்டும் மற்றொருமுறை வந்துபேசுவதாகக் கூறினார்.

அருப்புக்கோட்டை கூட்டத்திடலிலிருந்து நகரைவிட்டு வெளியே வரும்வரை காவிரி நதி புதுப்புனல் எடுத்து ஓடும் போது கரை ஓரங்களில் அலைமோதுவதுபோல் மக்கள் சாரை சாரையாக நெருக்கிக்கொண்டும் தள்ளிக்கொண்டும் நின்றிருந்தனர்.

புரட்சிச் செல்விக்கு வாழ்த்தொலி எழுப்பி வழியனுப்பி வைத்தனர்.

மேற்கு முகவை மாவட்டக் கூட்டங்களில் தென் பாண்டி மண்டலத்தின் சிங்கங்கள் மருது பாண்டியர்கள், முக்குலத்தின் தலை மகனாம் பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் ஆகியோருக்கு அண்ணாவின் தம்பி புரட்சித்தலைவரின் அரசு சேர்த்த பெருமைகளை புரட்சிச் செல்வி எடுத்துரைத்தார்.

அடுத்து...

கர்மவீரர் காமராஜர் பிறந்தவிருதுபட்டி-விருதுநகர் கூட்டத்திற்கு புரட்சிச் செல்வி வந்து சேர்ந்தார்.

இனி விருதுநகரில் கழக பொதுக்கூட்டம் கூட்டுவது என்றால் நகரை விட்டு ஐந்து அல்லதுபத்து கிலோமீட்டர் தூரத்தில் விருதுநகருக்கு வெளியே தான் கூட்ட வேண்டும்.

ஆமாம்!

அவ்வளவு திரளான மக்கள் திரண்டிருந்தனர். கூட்டத்திடலுக்கு வர முடியாமல்—இடமில்லாமல் வீட்டு மாடிகளிலும் மரங்களிலும் சாலைகளில் அமைக்கப்பட்டிருந்த ஒலி பெருக்கிகளின் முன்பும் கூட்டம் கூட்டமாகக் கூடியிருந்தனர்.

வேறு கட்சியினர் பார்த்தால் அந்தந்த இடங்களிலெல்லாம் ஒவ்வொரு மாநாடே நடத்தி இருப்பார்கள் அவ்வளவுகூட்டம் அங்கெல்லாம் நின்றிருந்தது.

மேடைக்கு தீ வைத்து விட்டால் கூட்டம் நடக்காது. பயந்துபோய் புரட்சிச் செல்விதிரும்பிப் போய் விடுவார் என்று எண்ணி எக்காளமிட்டுக் கொண்டிருந்த எத்தர்கள்எல்லாம்ஏமாளிகள் ஆனார்கள் என்று தான் கூறவேண்டும்.

சாத்தூரா? சிவகாசியா? அருப்புக்கோட்டையா? விருதுநகரா? எதனைவிட எது அதிகம் என்று கணக்குப் போடுவதே மனதிற்குள் பெரும் போராட்டமாக இருக்கிறது!


காவேரிப்பட்டினத்திற்கு வருகை தந்த கழக கொள்கை பரப்புச் செயலாளர் புரட்சிச்செல்வி ஜெயலலிதாவுக்கு கழக எம். எல். ஏ. டாக்டர் சமரசம் வாழ்த்து மடலை வாசித்தளித்தார்


ஏற்காடு கழக கூட்டத்தில் பங்கேற்ற கொள்கை பரப்புச் செயலாளர் புரட்சிச் செல்வி ஜெயலலிதாவுக்கு சிறுமி மாலையணிவித்த போது எடுத்த படம்.


மொரப்பூரில் நடந்த கழக நிகழ்ச்சியில் கொள்கை பரப்புச் செயலாளர் புரட்சிச்செல்வி ஜெயலலிதாவுக்கு வரவேற்பிதழ் வாசித்தளிக்கப்பட்டது.